வாலகவி இராமசாமிக் கவிராயர் இயற்றிய

வேலாபுரி

# கறுப்பண்ண சாமி சதகம்

பதிப்பாசிரியர்

டாக்டர்

ச. வே. சுப்பிரமணியன்



மெய்யம்மை பதிப்பகம்

வாலகவி இராமசாமிக் கவிராயர் இயற்றிய

# வேலாபுரி
# கறுப்பண்ணசாமி சதகம்



பதிப்பாசிரியர்

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்**

## திருமண வெளியீடு

திரு. இராம. பெரி. பெரியகருப்பன் செட்டியார் மகன்

திருவளர் செல்வன்

**இராமசாமி, பி. காம்.,**

திரு. சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார் மகள்

திருவளர் செல்வி

**விசாலாட்சி**

ஆகியோரின் திருமணத்தில் வழங்கப் பெற்றது.

தி.ஆ. 2013 கார்த்திகை 12 28 - 11 - 1982

காரைக்குடி

# பதிப்புரை

என் மகன் திருவளர் செல்வன் இராமசாமியின் திரு மணத்தில் புதியதொரு நூலினை வெளியிட வேண்டும் எனப் பண்டாரகர் திரு. ச. வே. சுப்பிரமணியனாரிடம் கூறியபோது அவர்கள் அச்சேறாத ஓலைச் சுவடிகள் பல உள்ளன என்றும், அவற்றுள் நல்லதொரு நூலினைத் தேர்ந்து தருவதாகவும், அதனையே திருமணத்தில் வெளி யிடலாம் என்றும் கூறினார்கள்.

அங்ஙனமே ஓலைச் சுவடிகள் பலவற்றை ஆராய்ந்து ''கறுப்பண்ணசாமி சதகம்'' எனும் இந்நூலைத் தேர்ந்து எடுத்தார்கள். ஓலைச் சுவடியிலிருந்து படியெடுத்துதக்க விளக்கமும் எழுதிச் சிறந்த முறையில் பதிப்பித்துள்ளார் கள். அவர்கட்கு என் உளமார்ந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக்கொள்கிறேன். இந்த நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டுத்தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமை யாளர் திரு நாரா. நாச்சியப்பன் அவர்கள் என் பாராட்டு தலுக்கு உரியவர்கள்.

கருப்பர் எங்கள் குலதெய்வம்; எங்கள் குடும்பத்தில் இரண்டாவதாகப் பிறக்கும் ஆண்மகவுக்கு ''பெரிய கருப்பன்'' எனப் பெயரிடுவது தொன்றுதொட்டு வரும் மரபு.

எங்கள் குலதெய்வம் கருப்பரின் பெயரால் அமைந்த சதக நூலினை என் மூத்த மகன் திருவளர் செல்வன் இராமசாமிக்கும் இந்நகர் திரு. சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார் மகள் திருவளர் செல்வி விசாலாட்சிக்கும் 28 - 11 - 82 ஆம் நாள் நடைபெறும் திருமணத்தில் வெளி யிடுவது சாலவும் பொருத்தமுடையது.

எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தி இன் புற்று வாழ எங்கள் குலதெய்வமாம் கருப்பர் இன்னருள் புரிவாராக!

அன்பன்,

**இராம. பெரி. பெரியகருப்பன்.**

# முன்னுரை

சதகம் எனும் சொல், சதக எனும் வடமொழிச் சொல்லினை அடிப்படையாகக் கொண்டு, நூறு பாடல்களையுடைய பிரபந்த வகை, நூற்றாண்டு எனும் பொருள் தருகின்றது.[1] நூறு என்று பொருள்படும் சத எனும் சொல்லின் ஆக்கமாக இது அமையலாம். சதகம் எனும் சொல்லின் முதல் ஆட்சி, தமிழில் மாணிக்க வாசகரின் 'திருச்சதகம்' என்ற பகுதித் தலைப்பில் அமைகின்றது.

இலக்கிய வகைகளான பிரபந்தங்களுக்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்களுள், சதகம் பற்றிய முதற்குறிப்பு பிரபந்த மரபியலில் அமைகின்றது.

> கருது பொருள் இடம் காலம் தொழிலின்
> முப்பான் நாற்பான் எழுபான் தொண்ணூறு
> நூறான் வெண்பாக் கலித்துறை யிதனால்
> மன்னும் அவ் எண்ணால் மாலை மஞ்சரி
> காஞ்சிமாலை முல்லைக்கலி சதகம் என்று
> இயலும் செய்யுட்கு ஏற்ற பெயரே (16)

சதகம் என்ற பெயர்மட்டுமே இங்கமைய, இலக்கண விளக்கமே முதன்முதல் இப்பிரபந்தத்தை விளக்க முனைகின்றது.

> விளையும் ஒரு பொருள்மேல் ஒருநூறு
> தழைய உரைத்தல் சதகம் என்ப (847)

இங்கு, நூறுபாடல் எனும் எண்ணளவை சுட்டப்பட்டு, பொருள் வரையறை பற்றிய சிந்தனை அளிக்கப்படவில்லை. பொருள் அகமோ புறமோ ஆகலாம் எனும் எண்ணம் வீரமாமுனிவரிடம் இடம் பெறுகின்றது. தொன்னூல் விளக்கத்தின் உரையும் சதுரகராதியும் இதனை அளிக்கின்றன.

> சதகம்—அகப் பொரு ளொன்றன் மேலாதல்
> புறப் பொரு ளொன்றன் மேலாதல் கற்பித்து
> நூறு செய்யுட் கூறுவது[2]

---

1. தமிழ் லெக்சிகன், தொகுதி, 3, பக், 1254.
2. சதுரகராதி, (பதி) சூ. இன்னாசி, வீரமாமுனிவர் ஆய்வுக் கழக வெளியீடு, பாளையங்கோட்டை, 1979, பக். 285

இக்கருத்து பின் நூல்களில் ஓரளவு அவ்வாறே தொடர்ந்து செல்கின்றது. சுவாமிநாதத்தை நோக்க, நூறு பாடலும் ஒரே யாப்பாகி, பாடல்கள் தம்முள் ஒருமை கொண்டு அமைய வேண்டும் என்று தோன்றுகின்றது.

பயிலும் ஓர் பாட்டாய் நூறு உரைப்பதுதான் சதகம் (168)

பாட்டியல் நூல்கள் தரும் இவ் இலக்கண எண்ணங்கள், மிகுந்த பொதுமை கொண்டு அமைகின்றன. ஆயின் சதகம் எனப் பெயர் பெற்ற இலக்கியங்களைக் காணும் போது, அவை சில தனித்தன்மையும் சிறப்பு வரையறைகளும் பெற்று அமைவதாகத் தெரிகின்றது.

நூறு என்ற எண் நிலையுடன் இலக்கியம் அமைதல்; ஐங்குறு நூற்றின் ஒவ்வொரு திணையிலும், பதிற்றுப்பத்திலும் அகம்-புறம் எனப் பொருள் நிலையுடன் அமைந்து காணப்பட்ட போதும், மணிவாசகரிடமே நூறுபாடலுடனும், பெயருடனும் அமைகின்றது, எனினும் அந்நூலும் தற்காலச் சதகப் பொருளோ, அமைப்போ கொண்டதாகத் தெரியவில்லை. பக்திப் பொருண்மை யுடையது இது. 'இறைவன் பத்து வகையாக வாதவூரரைக் காத்தருளி அடிமை கொண்ட அநுபவம்'[3] இதில் அமைகின்றது. பத்துப் பத்துப்பாடல்கள் ஒரு பகுதியாக ஒரு யாப்பில் அமைதல் இவற்றில் உண்டு. அந்தாதியும் காணப்படுகிறது.

சதகம் என்ற இலக்கிய வகை வடமொழியிலும் அமைந்த தாகத் தெரிகின்றது. நூலின் தலைப்பாக வருமிடத்து, இவை சதகம், நீதி சதகம் போன்ற பெயர் நிலைகள் காண முடிகின்றது.[4] பர்த்ரு ஹரியின் (6 ஆம் நூ) சதகங்கள் புகழ் பெற்றவை. சிருங்கார சதகம், வைராக்கிய சதகம், நீதி சதகம் என்ற இவரது நூல்கள், இவ் இலக்கியத்தின் பொருட் பன்மையை உணரத் துணை நிற்கின்றன[5] தமிழில் சதக இலக்கிய

3. திருவாசகம்-தெளிவுரை, அப்பர் புத்தக நிலையம், கேசிகன் பதிப்பகம், சென்னை, 1979, பக். 63
4. Sataka-consisting of a hundred...
   (akam). a hundred, a century...(esp in titles of works, a cento or a collection of 100 stanzas; cf. amaru—, niti-, 8c)
   A Sanskrit English Dictionary, Sir. Monier Williams, Oxford, 1974, p. 1051.
5. A History of Sanskrit Literature, A Berriedale Keith, Oxford University Press, Delhi, 1973, P 175.

மரபு செழிக்க இவை போன்ற, முன்னோடியாகலாம். ஆயின் பொருள் நிலையில் தமிழில், பெருக்கமும் பன்மையும் வேறுபாடும் அமைகின்றது.

மாணிக்க வாசகரிடமே 'சதகம்' அமைந்து விட்ட போதும், தமிழின் முதல் சதகமாகக் கி. பி. பதினோராம் நூற்றாண்டின் கார் மண்டல சதகம் குறிக்கப்படுகின்றது.[6] எனினும், மாணிக்க வாசகர் தோற்றுவித்தது, பிற்காலத்தில் தொடரப்படாத வகையாகி முற்றுப் பெற்றுவிட்டது என்றும், அவிநாசி ஆறைகிழார் தோற்றுவித்த 'மண்டல சதக' வகை பிற்காலத்தில் பலரால் தொடரப்பட்டதாக அமைகின்றது எனவும் கருதலாம்.

இதனால், சதகம் என்பது ஒரே அமைப்பும் பொருளுமுடைய ஒரே வகையிலக்கிய மாகாது. பெயரொருமையுடைய பல வகைகளைத் தன்னுள் அடக்கியதாகக் காணப்படுகின்றது. பொருளால் வேறுபட்டு அமையும் சதக வகைகளும், பெரும்பாலும் பாடல் எண்ணிக்கை-யாப்பமைப்பு-பாடலின் முன்னிலை தொடராட்சியமைப்பு போன்ற சில கூறுகளில் தம்முள் இணைவும் இயைவும் காட்டுகின்றன.

இதுவரை பெயர்க்குறிப்புக் கிடைப்பனவாக 9 சதகம் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.[7] இவற்றை (1) மண்டல சதகங்கள் (2) அறச் சதகங்கள் (3) வாழ்த்துச் சதகங்கள் (4) கதைச்சதகங்கள் (5) சிங்காரச் சதகங்கள் (6) வைராக்கிய சதகங்கள் எனப்பகுக்க இடமுண்டு. இவற்றுள் முதல்வகை நாட்டுச் சிறப்புப் பேசும் 'தலபுராண' மாக அமைகின்றன எனக் கூறல் சாலும். பின்னிருவகையும், இறைச் சார்பு கொள்வதால் தம்முள் ஒற்றுமை பெறினும், நோக்க வேறுபாட்டால் இணைவினைக் காட்டிலும் தனித்தன்மையே பெறுகின்றன. பின்னதில் இறைமையமும் முன்னதில் உலகியலும் கருவாகின்றன. இறைச் சார்பு கொள்ளும் இவற்றுள்ளும், இறைவனை மட்டும் வாழ்த்தல் என்பதுடன் இறைவனையும் வள்ளலையும் புகழ்தல் என்பதுவும் உள்ளமையால், தலைமையிலும் ஒருமையும் பன்மையும் காணப் பட வாய்ப்பேற்படுகின்றது.

---

6. சதக இலக்கியம்-ந. வீ. செயராமன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1978, பக். 7
7. மேற்படி, பக் 183-186

இறைவாழ்த்துச் சதகங்களின் வெளியீட்டுப் பகுதியின் புதுமை காரணமாக, அதன்கண் இன்னும் சில பகுப்புக்காண ஏதுவாகின்றது. பதினெண் கீழ்க்கணக்கின் பழமொழி நானூறு எனும் நூலின் செல்வாக்கு விளங்கும்படி, சதகம் சில தம் பாடலொவ்வொன்றிலும் பழமொழி யாட்சி கொள்வது இது. இன்னும் ஒருபடி மேற்சென்று, பழமொழி மட்டுமன்றி அதன் விளக்கங்களையும் இணைப்பனவும் சதகவகையில்உள. முதுமொழி மேல்வைப்பு நூல்கள், ஆத்திசூடி வெண்பா நூல்கள் போன்றன இவ்வாறு கதைகூறிக் கருத்து விள்க்கம் அளிப்பது இங்கு நினைக்கத் தக்கது.

உலகியல் கூறும் அறச்சதகங்களில், ஆசாரக்கோவை போன்ற வற்றின் செல்வாக்கால் போலும், ஆசாரச் செய்திகள் சிலவும் வருகின்றன. வாழ்வுக்கு, அறம் போன்றே இன்னும் பல அறிவும் உண்மையும் உணர்தற்குத் தேவையானவை என்பது பற்றி, கலை, சாத்திரச் செய்திகளும் தரப்படுகின்றன போலும். இது பொருட்பன்மை காட்டுகின்ற நிகண்டுகளின் செல்வாக்காகலாம். தாம் அறிந்ததை உலகோர்க்குப் பயனாவதை உரைக்க வேண்டு மென்ற நோக்க அடிப்படையினவாக இவை அமைகின்றன.

இதிகாச. புராணக் கதைகளைக் கூறவும் சதகம் எனும் இலக்கிய வகை பயன்பட்டுள்ளது. மக்களிடம் பரவலாக அறியப் பட்ட கதைகள் கும்மி, சிந்து போன்ற இசைவடிவங்களிலும் அம்மானை, குறவஞ்சி, மாலை போன்ற எளிய இலக்கிய வடிவங் களிலும் தரப்படுவதனை ஒத்த ஒரு நிலையாக இது அமைகின்றது எனலாம். இங்கும் இறைமையம் புலப்படுவது எண்ணத்தக்கது.

தமிழ்ப்புலவரின் இயல்பூக்க ஆக்கமாக எழுந்த சதகங்கள் ஒரு பாலாக, மொழிபெயர்ப்பு, தழுவல் ஒப்புமை, ஆக்கம் வழியும் இவ்வகை நூல்கள் தமிழில் இடம் பெறும் வாய்ப்பினை பர்த்ரு ஹரி நீதிசதகம், சிங்கார, வைராக்கிய சதங்கள் காட்டுகின்றன. பெரும்பாலும் தமிழ்ச் சதகங்கள் நூலாசிரியர் பெயரைத் தம் தலைப்பில் கொள்ளுதல் இல்லை என்பதும் இங்கு நினைத்தற் பாலது.

சதக நூல்கள் பெயர் பெறுமாறு தனிச் சிந்தனைக்குரியது. மண்டல சதகங்கள், இடவரலாறு ஆகியமையால் அவை இடப் பெயருடன் அமைதல் இயல்பு-கார்மண்டல[8] சதகம், கொங்கு மண்டல சதகம். கதைச் சதகங்கள், அவ்வாறே கதைத் தலைப்புப்

பெறுவது தெளிவு-கந்தபுராணச் சதகம், இராமாயண சதகம் வாழ்த்துச் சதகங்களில் இறைநோக்கம் மட்டும் கொள்வன இறைப் பெயர் கொள்கின்றன; மூர்த்தி, தலம் என்பன இந்நிலையில் வரு கின்றன-அவையாம்பிகை சதகம், அருணாசல சதகம்,வடவேங்கட நாராயண சதகம். தண்டலையார் சதகம், பழமொழி ஆட்சி பற்றிப் பழமொழி விளக்கம் என்றும் பிறிதொரு பெயரும் கொள் கின்றது.

பாடல்கள், சதக நூல் தலைப்பைத் தம்முள் தாங்கி நிற்றல் என்பது ஒரு குறிப்பிடத்தக்க இயல்பாகும். இறை வாழ்த்துச் சதகங்கள் இறைப் பெயரை முன்னிலைப்படுத்தி, விளிவடிவில் முடித்தல் பெரும்பான்மை. இதனால் அவ்வந் நூலின் பாடல் களனைத்தும் ஈறொப்புமை பெறுகின்றன. பாடலின் இறுதி அடியோ, அடிப்பகுதியோ இவ்வாறு 'மகுட'மாகின்றது' இறைமையைத் துணைக்கொண்டு தரப்படும், உலகியல் நீதி கூறும் சதகங்களிலும் இவ்அமைப்பு உண்டு. சான்றாக அண்ணாமலைச் சதகம்,

...அருள் பெறு வசந்த ராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத் தேவனே

என்ற ஈற்றடிப் பகுதிகளுடையது. மண்டல சதகங்களும், முன் னிலையாக வன்றிப் படர்க்கைச் சுட்டலாகத் தத்தம் மண்டலப் பெயர் கொண்டு முடிதல் இயல்பு.

வண்டமிழ்க் கும்ப னனதாரியுந்
தொண்டை மண்டலமே (51)

பழமொழிகளைக் கொண்டமையும் தண்டலையார் சதகம்மட்டும் இந்நிலையில் சிறிது வேறுபட்டு, ஈற்றுப்பகுதியிலன்றி பெரும் பாலும் மூன்றாமடி இடையில் 'தண்டலை' எனும் சொல்வருமாறு யாக்கப்பட்டுள்ளது.

பிறக்கும்போ தொருபொருளுங் கொடுவந்த தில்லையுயிர்
பிரிந்து மண்மேல்
இறக்கும்போ திலுங்கொண்டு போவதில்லை யென்றுசும்மா
விருந்து வீணே

---

8. கார் மண்டலம்—கடுநாடு (கர்னாடகம்)

சிறக்குந்தா யினுமருள்வார் தண்டலையிற் சேராமற்
றேச மெல்லாம்
பறக்குங்கா கமதிருக்குங் கொம்பறியா தெனத்திரிந்து
பயன்பெ றாரே (49)

ஆயின், நாராயண பாரதியின் கோவிந்த சதகம், பழமொழிகளைப் பாடலில் ஆண்டுகொண்ட போதும், அவற்றை இறுதியிலன்றி இடையில் வைப்பதால், பாடலீற்று ஒப்புமையைக் கடைப்பிடிக் கின்றன. அச்சுதாநந்த கோவிந்தனே என்பது இவற்றின் முடிவு.

வணங்காருன் பாதங்கள் வாழ்த்தாருன் னாமங்கள்
வாழ்த்திநித்தம்
இணங்கா ரறிவற்ற புல்லர் நல்லோர்தம்
மியற்கைகுன்றார்
கணங்காணுங் கட்டிக் கரும்புதின் பார்க்குக்
கசப்பதுவாய்க்
குணங்காண் கரும்ப தென்னா ரச்சுதாநந்த
கோவிந்தனே (95)

பாடல் எந்நூலுக்குரியன என்பதை உணர இவ் ஈற்றுப் பகுதி களினமைப்பு உதவுகின்றன. அத்துடன், ‘அந்தாதி’ பெற்றதால் நூறுபாடலும் ஓரிழையின் மணிகளாக அமைந்த முதல் திருச் சதகத்தின் வேறாக, பாடல் ஈறொப்பு அமைதலால் அவ்வொருமை உணர்த்துதல் என்பது சதகப் பொது இயல்பாகப் பெரும்பான்மை யோராலும் கொள்ளப்பட்டது என்பதும் புலப்படுகின்றது. பிரபந்தங்கள் பிறவற்றிலும் (மாலை, பிள்ளைத்தமிழ், ஆசிரிய விருத்தம்...)இத்தகுபாடல் ஈறொப்பு அமைதல் இங்கு நினைக்கத் தக்கது. தனித்தனி ஏடுகளில் பாடல்கள் எழுதப்பட்ட கால கட்டத்தில்-பாடல்களை மனனம் செய்து நினைவாற்றலில் கொள்ளவேண்டிய அக்கால கட்டத்தில், இது ஒரு கவிஉத்தியாக இருந்தது போலும்.

யாப்பமைப்பிலும் சதகங்களிடையே ஒருமைப்பாடு காணப் படுகின்றது. ஒரு சதகத்தின் நூறுபாடலும் ஒரேயாப்பில் அமைதல் என்பது மாணிக்கவாசகருக்குப் பின் காணப்படுகின்றது. இறை யனுபவத்தின் பல்நிலைகளைப் பத்துப் பாடலுக்கு ஒருயாப்பாக மாற்றி மாற்றிப்பாடும் தேவை அவர்க்கு இருந்தது, பின் இல்லாமை, இவ்யாப்பு ஒருமைக்குக் காரணமாகலாம். ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கட்டளைக் கலித்துறை என்பன பெரும்

பான்மையான சதக யாப்பாகும். நூலின் முன் பாயிரம், கடவுள் வணக்கம். அவையடக்கம் எனப் பகுதிகள் சில வெண்பாவா கின்றன. பெரும்பாலும் மண்டல சதகங்கள் கட்டளைக் கலித் துறையாகவும், இறைவாழ்த்துச் சதகங்கள் கலிவிருத்தமாகவும், உலகியல் எண்ணங்கள் கூறுவன ஆசிரியவிருத்தமாகவும் அமைய லாம் எனத் தோன்றுகின்றது. உலகியல் எண்ணங்கள் விரிவுடை யனவும், விளக்கம் வேண்டுவனவும் ஆகையால் போலும், ஆசிரிய விருத்தங்கள் அறுசீர், எண்சீர், பன்னிருசீர் எனப் பெருகி அமை கின்றன.

நூறு பாடல் என்ற சதகத்தின் வரையறை, இடைச்செரு கலைத் தவிர்க்க இடனளிக்கின்றது எனலாம். எனினும் பல நூல் கள் நூறினும் மிக்குச் செய்யுள் கொள்கின்றன. மிகைப் பாடலமைவதைப் பழமொழிச் சதகங்கள் தருகின்றன. நூறு பாடலினுள்ளேயே கடவுள் வாழ்த்து போன்றன அமைத்தல் ஒரு நிலையாக, பாயிரம், அவையடக்கம், பயன்...போன்றனவற்றை நூலின் நூறுபாடற்குப் புறத்தே கொள்வதும் ஒருதன்மையாகக் காணப்படுகின்றது. இதனாலும் பாடல் எண்ணில் மிகுதி ஏற்படுகின்றது.

இலக்கியம், பயன் கருதியே இயற்றப்படுகின்றதெனினும், பயன் இன்னது என விதந்தோதல் சில காலத்து, சில நூல் களிலேயே காணப்படும் மரபாக அமைகின்றது. அறம், பொருள், இன்பம், வீடு எனும் நாற்பயன் கருதுதல் ஒருவிதமாக, அறநூல்கள் உலகியல் நல்வாழ்வுப் பயன் கருதக் கூடியன என எண்ணலாம். இறைச்சார்புடன் அறமும், உலகியலும் கூறும் இச்சதகங்களுள் சில முத்திப்பயனும் கூறுகின்றன. குமரேச சதக இறுதிப் பாடல் பகுதி இவ்வாறு அமைகின்றது.

பாடலொரு நூறுநாடி
நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்றபேர்கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும்பெறுவரே (100)

ஏற்கெனவே கண்டவிதமாக, சதகங்கள் என்பன பல்பொருண் மையுடையன. பொருண்மைநிலையில் சதகங்களை ஒருபொருள் கூறுவன, பல பொருளும் உட்கொள்ளுவன என இரண்டாகப் பகுக்கலாம். மண்டல வரலாறு திருத்தொண்டர் வரலாறு, ஒரு

தலத்தமர்ந்த இறைவனை வாழ்த்துதல் எனும் நூல்கள் பொருட் பன்மை கொள்ளாது, ஒரே மையத்தைக் கொண்டு அமைவன. ஆயின், அறமும், உலகியலும் கூறுவன பொருட்பன்மை கொள் கின்றன; பலவிதமான செய்திகளைத் தருகின்றன. இவை பெரும் பாலும் கருத்துக் கோவைகளாகவும், திரட்டுகளாகவும் அமை கின்றன எனலாம். சித்தர்கள் பலவற்றையும், கண்டு, கடிந்தும், வருந்தியும், அறிவுறுத்தியும் கூறியதுபோன்ற நிலை இதன்கண் உண்டு எனல் பொருந்தும்.

சமயம், சாதிபோன்ற உணர்வுகள் மிக்கிருந்த காலமாகப் பெரும்பான்மைச் சதகம் எழுந்த சூழல் அமைந்ததனால்போலும், நாற்குலம்-நாற்குலத்தார் இயல்பு போன்ற செய்திகள் அவற்றில் வரையறுக்கப்படுகின்றன. தொல்காப்பிய மரபியலும், பிற் காலத்திய நிகண்டுகளும் இத்தகு செய்திகளை ஓரளவு சுட்டியும் சுருக்கியும் தருவது இங்கு எண்ணத்தக்கது. குமரேச சதகம் அந்தணரியல்பு (2), அரசரியல்பு (3) வணிகரியல்பு (4) வேளாளரி யல்பு (5) எனத் தொடங்கிச் செல்கின்றது: திருவேங்கட சதகம் கயிலாசநாதர் சதகம் 'சிறப்பு' என இவற்றைக் கூறுகின்றன(2-5) அறப்பளீசுர சதகம் இவ்வாறன்றி உயர்பிறப்பு (1) மனையாட்டி சிறப்பு (2) நன்மக்கட்பேறு (3) எனத் தொடங்கி, நூலின் இடை யில் (81-84) இவற்றைத்தந்து வேறுவிதமாகச் செல்கின்றது. இதனால் உலகியல் கூறும் சதகங்களும் தம்முள் வெவ்வேறுவித மான பொருள் தொடக்கம் கொள்ள இடனுண்மை புலப்படு கின்றது. அண்ணாமலைச் சதகம், தலச்சிறப்பு, இறைமுழுக்கு, தீர்த்தமேன்மை...போன்று தொடங்கி சமயச்சார்பு மிக்குக் கொள் கின்றது. இதனால் பிற உலகியல் நீதி சதகங்களிலிருந்தும், இறை வாழ்த்துச் சதகங்களிலிருந்தும் இது வேறுபட்டு இடைப்பட்டு நிற்கின்றது.

அறநூல்களில் இடம்பெறும் இயல்பினவான பல செய்திகள் இவற்றின்கண் உள. நட்பு (68), காலமறிதல் (69), இடமறிதல் (70) யாக்கை நிலையாமை (71) செல்வம் நிலையாமை (73), நடுவு நிலைமை (61), குறிப்பறிதல் (38) எனக் குமரேசசதகம் பல நீதிகள் கூறுகின்றது. பொருள் செயல்வகை (7), ஊழ் (54), சினம் (87) தருமம் (94), இல்லறம் (95) என அறப்பளீசுர சதகம் சில எண்ணங் கள் தருகின்றது. செல்வம் (14), கல்வி (17) போன்றன பற்றிக் கயிலாசநாதர் சதகம் சொல்கின்றது. சூதின் தீமை (12), பயனில் சொல் (31) எனச் சிலவற்றைத் திருவேங்கட சதகம் கூறுகின்றது.

ஏற்கெனவே முன் சுட்டிய விதமாக, இறைமையும், நீதியும், ஜாதியும் தவிர இன்னும் பல எண்ணங்களும் சதகத்தில் இடம் பெறுகின்றன. மக்களின் நம்பிக்கை, பழக்க வழக்கம் போன்றன இதற்குக் காரணமாகலாம். சோதிடம், மனையியல் சாஸ்திரம், அசுவ சாஸ்திரம் போன்று மக்கள் வாழ்வில் தேவையாகி இன்றி யமையா இடம் பெற்ற பல பொருண்மைகளாக இவை அமை கின்றன. இதனால் இச் சதக நூல்கள் அம்மக்களுக்கு வாழ்வியல் கையேடாக அமைந்திருந்தது எனலாம்.

பெண்கள் ருதுவாகும் நக்ஷத்திர பலன் (77), பிரயாணத்துக் குரிய ராசி பலன் (94) அண்ணாமலைச் சதகத்திலும்; சென்ம நட்சத்திர வார பலனும் மாத பலனும் (73), புது வஸ்திர முடுக்க நாள் நட்சத்திரமும் (75) போன்றன கயிலாசநாதர் சதகத்திலும் கூறப்படுவது, பிற சில சதகங்களிலும் இடம் பெறல் கூடும்.

சகுணம் பற்றிய செய்திகளும் இந் நூல்களில் உண்டு. பறவை சகுனம் (அறப்பளீசுர 62-64), கருட தரிசன பலன் (கயிலாசநாதர் 39) பல்லி முதலிய வீழிற் பலன் (கயிலாச நாதர் 66), தும்மல், ஆந்தை காகம் கூவல் போன்றன (கயிலாச நாதர் 70), காக சாஸ்திரம் முதலிய (கயிலாச நாதர் 77-81) என இவற்றில் பல உள.

அசுவ இலக்கணம் (80-88) மிக விரிவாக அண்ணாமலைச் சத கத்திலும் ஓரளவு சுருக்கமாகக் கயிலாச நாதர் சதகத்திலும் (95-97) அமைகின்றது. மனையியல் சாஸ்திரத் தொடர்பாக, மனை கோலுவதற்கு மாதம் (அறப்பளீசுர 67) வீடு கட்டுகையில் நிலை நிலைமுதலியன பார்த்தல் (கயிலாசநாதர் 68)-போன்று பல செய்திகள் அமைவது குறிப்பிடத் தக்கது. சாமுத்திரிகா லட்சணம் (கயிலாச நாதர் 98-99), அண்ணாமலை 85-38), கொக்கோகம் (அண்ணாமலை 90) போன்றனவும் பேசப்படுகின்றன.

நிகண்டுகளும் தொகையகராதிகளும் தரும் எண் விளக்கம் சிலவும் இவற்றில் உண்டு. 32 தருமம் (94), பதினெண் புராணம் (96), திருமால் அவதாரம் பத்து (98) எனச் சிலவற்றை அறப்பளீ சுர சதகம் தருகின்றது. இராகம் முப்பத்திரண்டு (42), 96 தத்துவம் (44) என்பன கயிலாச நாதர் சதகத்திலும், 56 தேசம் (97), பதினெண் கணம் (99) போன்றன திருவேங்கட சதகத்திலும், 32 சைவம் (32), பதினாறு பேறு (33) போன்றன அண்ணாமலை சதகத்திலும் கூறப்படுகின்றன

முத்தமிழ் பற்றிய சில சிந்தனைகளும் இந்நூலில் உண்டு பாட்டியலின் ஒழிபுகள் தரும் கவிஞர் இயல்பு போன்றனவும் அங்கங்கு இணைக்கப்படுகின்றன. கல்விக்கும் கவிதைக்கும் கவி ஞர்க்கும் உரிய சிறப்புக் கொடாமையால் குறுநிலை வேந்தரிடமும் நிலை ஆளுநரிடமும் அண்டிப் பிழைக்கும் பொருள் வாழ்வினராக அமைந்த புலவரின் மன வெளிப்பாடாக இவை அமையலாம். அரசர் கவிவாணருக்குச் செய்யும் உபசாரம் (58), புல்லரைப் பாடும் புலவர் பயன் பெறாமை (60) எனத் திருவேங்கட சதகம் சில கூறுகின்றது. கல்விப் பொருட் சிறப்பு (55), கவிதைச் சிறப்பு (56) என்பனவும் இதில் உள. கவிஞர் வறுமை (74), கவிஞன் (75) என அறப்பளீசுர சதகம் சில விளக்கம் அளிக்கின்றது. நற்புலவர் தீப்புலவர் செயலைக் குமரேச சதகம் (83) கூறுவதுடன், பாட லியல்பையும் விளக்குகின்றது.

எழுத் தசைகள் சீர்தளைக ளடிதொடைகள் சிதையா
திருக்க வேண்டு மப்பா
வீரம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் களமய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொரு
ளடக்கமு மிருக்க வேண்டு
மன்பான பாவின மிசைந்துவரல் வேண்டுமு
னலங்கார முற்ற துறையில்
பழுத்துள முவந்தோசை யுற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக வின்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்... (86)

இவ்வாறு இலக்கியம் பற்றிய எண்ணங்கள் பல அங்கங்கமைவது கொள்கைகள் காண இடனளிக்கின்றன எனலாம்.

பலவகை நோக்குடையனவாக அமையும் சதகங்கள், தம் இயல்புக் கேற்பப் பல்வகை வெளியீடுகளும் கொள்ளல் கூடும் ஏற்கெனவே கண்ட விதமாக இறை முன்னிலை மிகுதி. துதி நூல் கள் தன்னிரக்க வெளியீடுகளும், பல் நலம் விரும்பும் வேண்டுதல் களுமாக ஒலிக்கின்றன.

பல்லார்விடப் பணியாமுனைப்
பரிந்தேதொழ வருளீந்ததும்
பொல்லாவிட முண்டண்டரைப்
புரந்ததாள்வது மோர்ந்தும்முனைத்

கல்லார்களைச் சேராநெறி
களையேற்களுள் செயவேண்டுமால்
அல்லார்சுட லையிலாடிய
அருணாசலா அருணாசலா (57)

என இறையியல்புகள் சுட்டலும்,முன் செய்திகள் நினைதலும் உண்டு.

மக்களுக்கு அறிவுநலம் விளங்க எழுதப்பட்ட இந்நூல்களின் மொழிநடை எளிமையுடையதாக அமைகின்றது. எனினும் வட மொழிச் சொற்கலப்பு அமைதல் கால இயல்பாகக் கருதத் தக்கது. வரலாறு, கதைகள், உவமை எனப் பல்நலம் சிறக்க இவை யாக்கப் பட்டுள்ளன. வரலாற்றுக்கு உதவும் துணை நூல்களாகவும் இவை அமைவது குறிப்பிடற்குரியது.

## வேலாபுரி கறுப்பண்ணசாமி சதகம்

தமிழர் வழிபடு தெய்வங்களுள் கறுப்பண்ணசாமியும் ஒன் றாகும். பலவிடங்களிலும் கோயில் கொண்டுள்ள இத்தெய்வத் தைப் பற்றிய பாடல்கள் பல வழக்கில் உள்ளன. இலக்கிய வடி வங்களாகவும் சில கிடைக்கின்றன. 'கறுப்பண்ணசாமி ஆனந்தக் களிப்பு', 'கறுப்பண்ணசாமி காதல்', 'கறுப்பண்ணசாமி பேரில் பாட்டு' என்னும் பெயரில் வழங்கப்படும் இலக்கியங்கள் கறுப்பண்ண சாமியின் புகழ் பாடுவதாக அமைகின்றன. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள 'வேலாபுரி கறுப்பண்ணசாமி சதகம்' என்னும் இந்நூல் (R. 5)2›) பழமைச் சிறப்பு மிக்கதாக விளங்குகின்றது

## நூலமைப்பு

முதலில் காப்பு, பின் அவையடக்கம் என அமைந்து, பல்வேறு தலைப்புகளைக் கொண்ட பாடல்கள் தொடர்ந்து அமைந் துள்ளன. இறுதியில் வாழ்த்தும், நூற் பயனும் கூறப்படுகின்றன.

இந்நூல் பொதுவான ஒரு நீதி நூலாகக் காட்சி அளிக்கிறது. நூலின் ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு கருத்தை உள்ளடக்கிய தாக அமைந்து பல்வேறு நீதிக் கருத்துக்களை உலகினுக்கு அளிக் கிறது. பாடலின் இறுதி அடிகள் மட்டும் கறுப்பண்ண சாமியின் புகழையும் பெருமையையும் விளக்குகின்றன.

மனிதன் பிறந்தது முதல், அவன் தாய், தந்தை, உற்றார், உறவினர் மற்றும் உலகத்தோடும் இயைபு பெற வாழ வேண்டு

மென்பதே அறநூல்கள் கூறும் அடிப்படைக் கருத்தாகும். இதை முழுதுமாக விளக்கும் வகையில் இந்நூல் அமைக்கப் பட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## நாற்குலப் பாகுபாடு

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்குலப் பாகுபாடு தொன்று தொட்டு வழங்கப்படுவதாகும். இவர்களது தொழிலடிப்படையிலேயே இந்நால்வகைப் பாகுபாடு அமைந்துள்ளதை அறியலாம்.

## அந்தணர் சிறப்பு

"அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"[1]

என அந்தணர் சிறப்பை வள்ளுவர் உரைப்பர். மந்திரம், செபம், வேதம் ஓதல், பூசை செய்தல், தீமையை அழித்தல் போன்ற நற்செயல்களில் ஈடுபடும் அந்தணர்களை நடமாடும் தெய்வமாகவே இந்நூல் ஏத்திக் கூறுகின்றது.

## அரசியல்பு

நாடாளும் மன்னனுக்கென சில தகுதிகள் கூறப்படுகின்றன. சிறந்த நூலறிவு, ஞான நெறி, தைரியம், வீரம், மனத்திடம், கண்ணோட்டம், வாய்மை, பகைவரைத் தந்திரமாக வெற்றி கொள்ளும் திறம், அறம், அருள், ஆண்மை, மனுநீதிமுறைமை என இவ்வாறு பல வகைகளிலும் நாடாளுவோன் அமைய வேண்டியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

சிறந்த அரசாட்சிக்குச் சிறந்த அமைச்சர்கள் தேவை என்பதை இந்நூலின் 44 வது பாடல் விளக்குகிறது

## வணிகர், வேளாளர் சிறப்பு

வணிகரியல்பும் அவர்தம் கடமையும் விளக்குவதுடன், வேளாளரின் சிறப்பையும் எடுத்துக் காட்டியிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## அன்னதானச் சிறப்பு

யானை, குதிரை, பசு, பொன், மணி போன்ற விலையுயர்ந்த பொருள்களைத் தானமாகக் கொடுப்பதைவிட அன்னதானமே சிறந்தது என்பர்.

---

1. குறள்: 30

''அற்றார் அழிபசி தீர்த்தல்; அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி''[2]

என்னும் வள்ளுவர் வாக்கிற்கேற்ப, வறியவரின் கடும் பசியைத் தீர்க்கும் அன்னதானமே சிறந்தது என்பதை இந்நூலும் சுட்டு கின்றது.

'வருத்தும் பசிக்கினிய வன்னதா னத்தைநிகர்
மற்றொன்று சரியா குமோ'[3]
'கடும்பசிக் குதவன்ன தானத்தை யன்றிக்
கதித்தபுண் ணியமு மில்லை'[4]
'கனபசிக் களையினார்க் கன்னமளி யாமலே
கனகஞ் சொரிந்து மென்னாம்'[5]

என்னும் பாடலடிகள் இதை நன்கு உணர்த்துகின்றன.

மேலும், பாத்திரமறிந்தே பிச்சையிட வேண்டும் என்ற தத்துவத்தை, ஈகை என்னும் தலைப்பிலுள்ள பாடல் விளக்கு கிறது.[6]

## புகழ்

ஒருவனுக்குப் புகழ் உண்டாக வேண்டுமானால் அவன் உயிர் களிடத்தில் இரக்கம் உடையவனாக இருக்க வேண்டும் என்னும் அடிப்படைக் கொள்கையை 'இதனாலிது உண்டாமெனல்' என்னும் பாடல்[7] எடுத்துக் காட்டுகின்றது

இரக்கத்தால் தயவும், தயவால் பொறுமையும், பொறுமை யால் சாந்த குணமும், சாந்தகுணத்தால் அன்பும், அன்பால் ஈகையும். ஈகையால் புண்ணியமும், புண்ணியத்தால் புகழும் உண் டாகும் என இவை ஒவ்வொன்றையும் முறைப்படுத்திக் காட்டி யிருப்பது அறியத் தக்கதாகும்.

## நல்லொழுக்கம்

வெகுளாமை வேண்டும் என்பது பல்வேறு புராண நிகழ்ச்சி களால் விளக்கப்படுகிறது.[8]

---

2. குறள்: 226.
3. பா. எண்: 8.
4. பா. எண்: 12.
5. பா எண்: 13.
6. பா. எண்: 6.
7. பா. எண்: 15.
8. பா. எண்: 24.

நூறு யாகம் செய்வதைவிட மனதிலுள்ள இறுமாப்பு அல்லது ஆங்காரத்தை மாற்றுவது எல்லாவற்றையும்விட சிறப்பானது என்பர்.[9]

பிறன் மனை நோக்காத பேராண்மையும் பல எடுத்துக்காட்டு களால் விளக்கப்படுகிறது.[10]

ஆணவத்தாலழிந்தோர் பலரையும் எடுத்துக் காட்டி ஆண வத்தை ஒழிக்க வேண்டும் எனவும் கூறப்படுகிறது[11]

இவ்வாறு நல்லொழுக்கம் பெற வேண்டியதின் அவசியத்தைப் பல பாடல்களும் விளக்கக் காணலாம்.

## தாயின் பெருமை

'பெற்ற தாய்க்கு உவமையாக இவ்வுலகில் ஒன்றுமில்லை'[12] என்பர். மேலும், பெற்றதாய், பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய் முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய், அரசன்தேவி, குருவின் தேவி தன் மனைவியின் தாய், அண்ணன் தேவி இவர்களையும் தாயென மதித்தல் வேண்டும் என்பர்.[13]

## தமிழின் பெருமை

மகிழ்ச்சி தரும் பொருள்களாகச் சந்தனம், விபூதி, கத்தூரி, புனுகு, பட்டாடை, இளந்தென்றல் என்னும் பல பொருள்களைச் சுட்டுவதுடன் 'செந்தமிழையும்' சேர்த்துக் கூறியிருப்பது அறிந்து இன்புறத் தக்கதாகும்.[14]

'சோதியில் உயர்ந்தது சூரியன்', 'மலைகளில் உயர்ந்தது கயிலைமலை' என இவ்வாறு ஒவ்வொன்றிலும் உயர்ந்தனவற் றைக் கூறுமிடத்து, சுவைகளில் உயர்ந்தது 'தமிழ்ச் சுவையே' என விளக்குவது குறிப்பிடத் தக்கதாகும்.[15]

## புலமைச் சிறப்பு

அருணகிரியார், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர், சுந்தரர், அப்பர், நக்கீரர் போன்றோரின் தமிழ்ப்புலமைச் சிறப்பு பெரிதும் போற்றப்படுகின்றது.

---

9. பா. எண்: 14.
10. பா. எண்: 23.
11. பா. எண்: 86.
12. பா. எண்: 12.
13. பா. எண்: 7.
14. பா. எண்: 10.
15. பா. எண்: 17.

'மடுத்தமுத முண்டதெய் வப்புலமை யானகவி
வாயரிவ ராகு மன்றோ'[16]

என்னும் பாடலடிகள் இதை யுணர்த்தும்.

## பூர்வ புண்ணியர்

தாய், தந்தைவழி எவ்வித குற்றமும் இல்லாது, கற்பும் அழகும் பொருந்திய மனைவியை மணந்து, மனமொத்து வாழ்ந்து, அறிவுள்ள நன்மக்களைப் பெற்று, நீண்ட நாட்கள் பிணி ஏதுமில் லாமல், ஆயிரம் பிறை கண்டு, தான தருமங்களைச் செய்து எல்லோருக்கும் நல்லவனாக வாழ்பவரே பூர்வ புண்ணியர் என்பர்[17]

இதற்கு எதிரான செயல்களைக் கொண்டவர் 'பூர்வ பாபி கள்' எனவும் கூறுவர் [18]

## சிறப்பான சில பொருள்கள்

உடலில் எந்த உறுப்புக்கும் இல்லாத சிறப்பு 'கண்' ஒன்றுக்கு மட்டுமே உண்டு. 'கண்' இல்லாமல் மற்ற உறுப்புகள் இருந்து ஒரு பயனும் இல்லை என்பதை 'நேத்திர விசேடம்' என்னும் தலைப்பில் காணலாம்.[19]

'நீரின்றமையாது இவ்வுலகம்' என்னும் முதுமொழிக் கேற்ப 'நீரின் சிறப்பைப்' பலவாறு கூறக்காணலாம்.[20]

மரங்களில் சிறந்தது வில்வ மரமே எனக் கூறப்படுகிறது[21] ஆயினும், பருத்தி மரத்தைக் 'கற்பக விருட்சம்' என விளக்கி, இம் மரம் தரும் பயனையும் சிறப்பையும் பலவாறு கூறக் காணலாம்.[22]

## நன்மக்கள்

அறிவு நிரம்பிய பிள்ளைகளுக்கு மேலான பாக்கியம் ஏது மில்லை என்பர்.[23] நல்ல பிள்ளைகளின் பெருமையை விளக்குவ

16. பா. எண், 41.
17. பா. எண். 18
18. பா. எண். 19.
19. பா. எண். 20.
20. பா. எண். 37
21. பா. எண். 17
22. பா. எண். 36
23. பா. எண். 12

துடன்,[24] இரகுராமர், கிருட்டிணர், பாண்டுமக்கள், மார்க்கண்டன், அனுமான் இவர்களைப் போல நல்ல மைந்தர்கள் பிறந்துவிடில் மூவேழு தலைமுறையும் சிறப்பெய்துவர் எனச் சுட்டியிருப்பது அறியத்தக்கதாகும்[25].

இவ்வாறே,தீய புதல்வர்களையும் பல எடுத்துக் காட்டுகளால் விளக்கக் காணலாம்.[26]

## அறிவின் பெருமை

அறிவுடைய நன்மக்களாலேயே உலக இன்பங்களைத் துய்க்க முடியும் என்னும் கருத்து இந்நூல் முழுதும் கூறக் காணலாம். அறிவில்லாதவர்களை, மூடர், கசடர், துர்ச்சனர் எனப் பலவாறு கூறுவதையும், அவர்களின் இழிதன்மையை ஆங்காங்கே விளக்கப் படுவதையும் காணலாம்.

## சில நீதிகள்

ஐயமிட்டுண்டிடார், மானங்குலைந்தவர், அநியாய விலைகள் விற்போர், சமயம் குலைந்தோர், நிர்வாணமாய் நதியில் மூழ்குவோர், லஞ்சம் வாங்குவோர் இவர்கள் நரக வேதனைப் படுவர் எனப்படுகிறது.[27]

அழிதகை யுடையோர் வாய்பேசுபிணங்கள் என்பர்.[28] மேலும், பெண்களை அணையும் முனிவர், தன் குல நடத்தையை விட்டவர், போரில் எதிரியுடன் சேர்ந்தவர், கொடையிலாது செல்வம் படைத்தவன், கோள் சொல்பவன், குழந்தைகளின் சண்டையைப் பெரிதாக்குபவன், மடையருடன் உறவாடுபவன் என இவர்கள் மனிதரில் சவம் என்றும் கூறுவர்.[29]

## விதியின் வலிமை

எல்லாம் விதிப்படியே நடக்குமென்பதை இந்நூல் பெரிதும் வலியுறுத்துகிறது. 'விதி விதி யெனல்', 'விதியை விலக்கரிதெனல்' 'ஊழால் நரக வேதனைப் படுவர்' 'ஒருவரொருவர் நினைவின்படி முடியாதெனல்' போன்ற தலைப்பிலுள்ள பாடல்கள் இதை விளக்குகின்றன,

---

24. பா. எண். 27.
25. பா. எண். 82
26. பா. எண். 83
27. பா. எண். 34
28. தா. எண். 35
29. பா. எண். 33

விதி என்பது யாராலும் அறிய முடியாதது. மிகவும் மர்ம மான முறையில் செயல்பட்டு மனிதர்களை ஆட்கொள்வது. பிரமாதி போன்ற கடவுளர்களாலும் இதை மாற்றுவது அரிது என்னும் உண்மையைப் பல்வேறு சான்றுகளுடன் இப்பாடல்கள் கூறக் காணலாம்

இத்தகு அருமையான நல்ல கருத்துக்கள் பல இந்நூல் முழு வதும் பரவி இருக்கக் காணலாம்.

## நூற்பயன்

நல்வாழ்க்கைக்கு வகை செய்யும் பயனுள்ள அறக்கருத்துக் களை உள்ளடக்கிய இந்நூலைக் கற்றுணர்ந்து அதில் காணும் பொருள்களைத் தெளிவுபட ஆராய்ந்தறிந்தோர் மிகுந்த செல்வ மும், வளமும் பெற்று நீடூழி வாழ்வர் எனக் குறிப்பிட்டிருப்பது அறியத்தக்கதாகும்.

## நூலாசிரியர்

இராமசாமிக் கவிராயர் என்பவரே இந்நூலாசிரியர் ஆவார். 'வாலகவி ராமசாமி[30], 'மல்லைவரு கவிராசன்'[31] 'மற்புயாசலன் ராமசாமி'[32] என இந்நூலின் இடையிடையே காணப்படும் அகச் சான்றுகளும் இதற்கு அரணாக அமைகின்றன. இவர், சேதுபதி மன்னர் காலத்தில் வாழ்ந்தவர் எனத் தெரிகிறது.[33] இவர், இரகுநாத சேதுபதியின் காலத்தில் வாழ்ந்த மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் என்பவரின் புதல்வர் ஆவார். காலம் கி பி. 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும் கருதப்படு கிறது.

எளிய நடை, இனிய சந்த அமைப்பு, எளிய சொல்லாட்சி, சீரிய கருந்துக்கள், உவமை, உருவகம் போன்ற அரிய இலக்கிய உத்திகள் போன்றவற்றை உள்ளடக்கியதாக இந்நூலை அமைத் திருப்பது நூலாசிரியரின் புலமைச் சிறப்பை அறிய உதவுகிறது.

இந்நூலின் கருத்துக்கள் பல ஆசிரியரின் ஆழ்ந்த உலக அனுப வத்தைக் காட்டுவன. சமுதாயத்தில் வழிவழி வழங்கப்பட்டு

---

30. பா. எண். 101
31. பா. எண். 98
32. பா. எண், 99
33. பா. எண். 98

வரும் பல புராண,இதிகாசக் கதைகளில் காணும் கருத்துக்களையே எடுத்துக் காட்டாகக் கூறி விளக்கியிருப்பது குறிப்பிடத்தக்க தாகும்,

'இராமாயணப் பெருமை' பேசும் இந்நூலாசிரியர் தம் நூலி னிடையேஇராமாயணக் கருத்துக்கள் பலவற்றை வலியுறுத்திக் கூறுவது அவர் அதில்கொண்ட ஈடுபாட்டை விளக்குவதுடன் இராமாயணத்தின் பெருமையைப் பறை சாற்றுவதாகவும் அமைந் துள்ளதை அறியமுடிகிறது.

பொதுநிலையில், மனிதன் மனிதனாக வாழ வழி செய்யும் வகைகளை எடுத்துக் கூறும் ஒரு சிறந்த நூலாகவும், வேலாபுரியில் கோயில் கொண்டுள்ள கறுப்பண்ணசாமியின் பெருமையை விளக்கும் ஒப்பற்றதொரு நூலாகவும் இந்நூல் விளங்குவது போற்றற்குரியதாகும்.

ச. வே. சுப்பிரமணியன்.

# உள்ளே

# வேலாபுரி கறுப்பண்ண சாமி சதகம்

## காப்பு

பூமிபுகழ் வேலா புரியிற் கறுப்பண்ண
சாமி சதகந் தனைப்பாட - நேமித்
தடவார ணந்திகிரி தாங்குசெங் கைவேங்
கடவா ரணமுகத்தான் காப்பு.

முருகன் துணை

## அவையடக்கம்

ககனமணி யிரவிமுன் விளக்கிடுதல் போலவும்
கவினுற்ற யன்ன நடைபோற்
காக நடப்பதென வுங்கருடன் முன்பு
கொசுகு பறப்பது போலவும்
தகதகென் றிடுபொன் னகைக்குநிக ராய்ப்பித்
தளைப்பணி சமைப்ப தெனவும்
தாமரை மலர்க்கிணைய தாய்ப்பெருகும் வாவியிற்
றான்கொட்டி பூப்ப தெனவும்
மகிமைதரு மாணிக்க மாலையொப் பாய்க்குன்றின்
மணியைத் தரிப்ப தெனவும்
வயங்காணி முத்தோ டிசைவாய்ப் பெயருபெற்றா
மணக்கு முத்தது போலவும்
புகலரிய பிள்ளைநிக ராமரப் பாம்பிள்ளை
போல்கவிஞர் முன்பு வேலா
புரிக்கறுப் பண்ணர்மேற் சதகம துரைத்தேன்
பொறுப்பர் மனதென் னாளுமே. 1

---

காப்பு: நேமி – கடல். வாரணம் – சங்கு. திகிரி – சக்கராயுதம். வாரண முகத்தான் - யானை முகத்தான்.

அவையடக்கம்: பாட்டு 1: ககனமணி - (ககனம்Xஅணி) – ஆகாயத்தில் விளங்கும். இரவி – சூரியன். கவின் – அழகு. கொசுகு – கொசு. பித்தளைப் பணி–பித்தளை அணிகலன். சமைப்பது–செய்வது. வாவி – குளம். கொட்டி–ஒரு கிழங்குப்பூடு. குன்றின்மணி - குன்றிமணி. வயங்கு – ஒளியுள்ள. ஆணிமுத்து - வயிரமேறிய முத்து (முதிர்ந்த மூத்து).

## தெய்வத்திறம்

பூமேவு நவமணியை வாரியலை வீசுகடல்
புடைசூழ நெடிய வீரேழ்
புடவிமுத லாயிரத் தெட்டண்ட முங்கொண்ட
புவனப் பெரும்ப ரப்புந்
தேமேவு மகிலாண்ட நூறுகோடி யின்மேற்
சிறந்தபிரு மாண்ட மெங்குந்
திகம்பரா னந்தபரி பூரண மதாகச்
செகச்சோதி யாய்நி றைந்தும்
காமேவு தருவுறங் காப்புளி யினீழற்
கனகபீ டிகையின் மீது
கழல்நறுஞ் சாம்பிராணி வாசனை யுகந்தருள்
கதிக்கவிளை யாடி நின்றும்
மாமேவு கனமகிமை கொண்டதால் நின்போலும்
வையமேற் றெய்வ முளதோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும் 2
வளர்கறுப் பணசா மியே.

## அந்தணர் சிறப்பு

ஆதவ னுதிக்குநே ரத்தினிற் காயத்திரி
யைச்சிபம் புரிமகி மையால்
ஆதிநூ லொடுமற்ற நூல்களுந் தேர்ந்துநிதம்
யாக நடாத்து முறையால்
ஓதன்முத லாறுதொழில் சிவபூசை நிட்டைமிக
யுண்மையாய்ச் செய்த கமையால்
யுற்றதா பர்மணிச் செம்பினுந் தெய்வங்க
ளுண்டாக்கி வைத்திடு தலால்

---

பாட்டு 2: நவமணி - ஒன்பது மணிகள். அவை . கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம், வைடூரியம். புடவி - பூமி. அண்டம் - ஆகாயம். புவனம் - உலகம். அகிலாண்டம் (அகிலம்xஅண்டம்) எல்லா உலகமும். பிரும்மாண்டம் - உலகம். திகம்பரன்-சிவன். கா-சோலை. தரு-மரம். கனக பீடிகை – பொன் ஆசனம். கதிக்க - சிறக்க.

பாட்டு 3: ஆதவன் – சூரியன். காயத்திரி செபம் – ஒரு மந்திரம். நிதம் – நாள்தோறும். கடிவது - அழிப்பது. சலநரம் – மேகம்.

சாதகம தாய்க்கொடிய வினையெல்லாம் பார்வையிற்
தவிடுபொடி யாய்க்கடி வதால்
சலதரமு மழைபொழித லாலுயிர்கள் சகலமும்
தான்றழைத் ததுவளர் தலால்
மாதரா தலமதிற் கண்கண்ட தெய்வமரு
மறையோர்க ளென்பர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர் கறுப் பணசா மியே. 3

## அரசரியல்பு

தருமநூல் முதல்மற்ற நூலுணர்ந் தினியமா
தவமிலகு ஞான நெறியுந்
தயிரிய மனத்திடச் சவுரியமும் வாய்மைநெறி
தவறாத வமிர்த குணமும்
பருவமறி மந்திரி நட்பாளர் குடிகளான
படையினிற் கண்ணோட் டமும்
பராம் பரிக்கையறி பண்பும்வினை யாளரைப்
பார்த்தமைத் திடுதந் திரமும்
அருளீகை சுகிர்தபரி பாலனம் விளங்குதே
வாலயத் தினில்நே யமும்
ஆண்மைகெடி கொண்டசுக்கிராக் கினையு மடர்கையு
மகிலமின் பொற்பெரு மையும்
வருமகுட முடிநிருபர் செங்கோ னடாத்ததிக
மனுநீதி முறைமை யிதுகாண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 4

---

பாட்டு 4: மாதவமிலகு (மாxதவம்xஇலகு). சிறந்த தவத்தினை உடைய. தயிரியம் - தைரியம். சௌரியம் - வீரம். கண்ணோட்டம்-அருள் நோக்கம். பாரம் பரிக்கை - வழிவழியாக. அருளீகை (அருள்xஈகை). சுகிர்தம்-அறம். கெடி-புகழ். சுக்கிராக்கினை - கடுமையாகத் துன்புறுத்துதல். அடர்கை - போர் செய்தல். முடிநிருபர் - முடிமன்னர்.

## வணிகரியல்பு

கடல்நாடு நகரின்மலை காட்டிலுறு திரவியங்
காலமது கண்டு கொள்வார்
கட்டிவைத் ததிலாபம் வருகின்ற வேளையிற்
கண்டுள மகிழ்ந்து விற்பார்
உடலுயி ரெனப்பொரு ளையுங்காப்பர் வாய்மையுடை
யோர்களுக் களவி லாமல்
உதவுவார் வேணநிதி கள்ளப் புரட்டர்தம்
மூர்வழி தனிற்சென் றிடார்
அடல்சுகிர்த பரிபால னத்தினிற் காணிமுத
லாய்க்கோடி தான்கொ டுப்பார்
ஆதாய மதைமிஞ்சு செலவுஞ்செயார் தொகையி
லணுவளவு பிசகவும் விடார்
மடலலகு வாணிபஞ் செய்திடுந் தனவசியர்
மரபுக் கடுத்த தன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப்ப பணசா மியே. 5

## வேளாளர் சிறப்பு

பணமுற்ற மணிமுடி யனந்தன் சுமந்திடும்
பாருல கெலாஞ்செ ழிக்கப்
பயோதர முழங்கிமழை பொழிவதும் புகல்வேத
பார்கா தவப்பிர பலமும்
கணமுற்ற செங்கோ னடாத்தரச ராறிலொரு
கடமைகொண் டிடுபெரு மையும்
கடவுளா லயமெலாம் பூசனை விழாவலங்
காராமா கச்செய் வதும்

---

பாட்டு 5: அதிலாபம் – அதிக லாபம். வேணநிதி – மிகுந்த செல்வம். புரட்டர் – பொய்யர் அல்லது மாறுபாடு செய்வோர். அடல் – வெற்றி. சுகிர்த பரிபாலனம் – செங்கோலாட்சி. காணி - 1/80 அளவு. ஆதாயம் - இலாபம். மிஞ்சு - மிகுதியாக. மடலலகு - உயர்ந்த அளவு. பணம் - படம்.

பாட்டு 6: அனந்தன் – ஆதிசேடன் பயோதரம் - மேகம். ஆறிலொரு கடமை – 1/6 பங்கு அரசு பெறுதல். கெட்டு – வியாபாரம். காவி – கருங்குவளை மலர். மாலிகை - மாலை. மேழி – கலப்பை.

குணமுற்ற நல்லோர்கள் சுகிர்தங்கள் புரிவதுங்
கொண்டுவிற் கின்றசெட்டும்
கூறரிய வினையாளர் குடியுயரு நலமுங்
கொடுக்கின்ற தான வகையும்
மணமுற்ற காவிமா விகைமார்பர் மணிமேழி
மகிமைப்பிர தாப மென்பார்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திட.நாளும்
வளர்கறுப் பணசா மியே, 6

## தாயென மதிக்கப்படுவரிவர்

திங்களொரு பத்துஞ் சுமந்தீன்று முலைகொடுத்
திட்டதா யர்முதற் றாய்
செவ்வெணை புகட்டிநீ ராட்டிமை யெழுதியே
திலதமிட் டிடுவ ளொருதாய்
பங்கய மலர்க்கரத் தாலேந்தி யனுதினம்
பாராட்டு பவளு மொருதாய்
பாலமுத மூட்டுகின் றவளுமொரு தாயாடை
பணிதிருத் துவளு மொருதாய்
தங்கமணி முடிநிருபர் தாரமொரு தாய்குரு
தன்னுடைய தேவி யொருதாய்
தன்மனை வியைப்பெற்ற தையலொரு தாய்மூத்த
தமையன்மனை யாட்டி யொருதாய்
வங்கமுறு கடலுலகி லிவர்களைத் தாயென
மதிப்பர்நல் லோர்கள் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 7

---

பாட்டு 7: திங்கள் – மாதம். செவ்வெணை - செவ்வெண்ணெய் – குழந்தைகளுக்கு இடும் எண்ணெய். திலதம் – நெற்றிப் பொட்டு. பணி – ஆபரணம். நிருபர் தாரம் – அரச தேவி. தையல் – பெண். வங்கம் – மரக்கலம்,

## அன்னதானச் சிறப்பு

பருத்தகும் பத்திடை யிருந்துவரு மும்மதம்
பாயும் யானையி லாயிரம்
பஞ்சகதி கொண்டவாம் பரியிலோ ராயிரம்
பாற்பசு விலோ ராயிரம்
திருத்தமிகு கன்னிகா தானமது கோடிமேற்
செம்பொற் குடம்வென் னியாற்
செம்புதாம் பாளம் விளக்குதந் தத்தினாற்
சிவிகைகுடை வெண்சா மரை
கருத்துடன் குதிரைக் குளம்புதங் கத்தினாற்
காசுபட் டாடை பணிகள்
கனபொற் றகட்டுபீ தாம்பர நவமணி
கதிக்கவருள் தான மெல்லாம்
வருத்தும் பசிக்கினிய வன்னதா னத்தைநிகர்
மற்றொன்று சரியா குமோ
மணிகொழித் திடுவேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 8

## ஈகையின் பகுதியுமதன் விசேடமும்

குலநெறியில் வழுவிலா வேதியர்க் கேதானங்
கொடுப்பது முதற்றா னமாங்
குறைவுற்ற வங்கயீ னத்தவற் கேதானங்
கொடுத்தல்மத் திமதா னமாம்
அலகைகட் கியவது மதர்மதா னங்களா
மருள்மழைத் துளியொன் றுதான்
அலைகடற் சிப்பிவா யினில்வீழ்ந் திடிற்றானு
மாணிமுத் தாய்ப்பி றக்கும்

---

பாட்டு 8: கும்பம் - யானை மத்தகம். பஞ்சகதி - ஐந்து வகை குதிரை நடை. அவை, மையூரகதி, மல்லகதி, வானரகதி, விடபகதி, யாக்ரகதி என்பன. பரி - குதிரை. பாற்பசு - (பால்xபசு). சிவிகை - பல்லாக்கு. பீதாம்பரம் - பொன்னாடை.

பாட்டு 9: அங்க யீனத்தவர் - உறுப்புக் குறைந்தவர். ஈவதுமதர்ம தானங்கள். (ஈவதும்xஅதர்மxதானங்கள்). சலசைலம் - செலுலவு பாத்திரம் - தருமம் பெறத் தகுதி வாய்ந்தவன்.

சலசயிலை யினில்மேல் விழுந்தாற் றிரண்டது
தயங்கியலை வாய்க்கி டக்கும்
தழலினிடை காய்ந்திடு மிரும்பில்வீழ்ந் தாலுண்டு
தான்விடுந் தகமை போல
வலனுலவு பாத்திர மறிந்துநல் லோர்தானம்
வழிபடச் செய்வ ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 9

## மகிழ்ச்சி தரும் பொருள்

சந்தனம் விபூதிபூ ரணகும்ப மட்சதை
சபாதுகஸ் தூரி புனுகு
சட்டம்பன் னீரத்தர் கற்பூர தீபநற்
சாம்பிராணி கோரோ சனை
கந்தபொடி குங்குமஞ் சிந்தூரங் களபங்
கதம்பந் துலங்கு பச்சைக்
கற்பூர மிகுதிருச் சாந்துமலர் வெட் டிவேர்
கமழ்தரு மருக்கொ ழுந்து
செந்தமிழ் பட்டாடை திருநாட்கல் யாணமணி
செம்பொன்நகை ரத்தின மன்னம்
தேங்காய் கரும்புமுக் கனிபாக்கு வெற்றிலை
சீனிகற் கண்டு தேன்பால்
வந்திடு மிளந்தென்றல் மதியுமுல கோர்க்கீது
மகிழ்ச்சிதரு பொருளென் பர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே, 10

---

பாட்டு 10: அட்சதை - மங்கல அரிசி. சபாது - சவாது - வாசனைப் பொருள்,

## இதற்கிது அழகெனல்

தண்டமிழ்க் கழகுகச டறமொழிதல் செல்வந்
தனக்கழகு கிளைதாங் குதல்
திருதிருத் தேர்க்கழகு தலையலங் காரஞ்
சமர்க்கழகு சதுரங் கமாம்
கொண்டகற் புறுகுல மகட்கழகு தான்மருவு
கொழுநர்சொற் படிந டாத்தல்
கொம்பனைய விலைமகட் கழகுதன் மேனியை
கோலமாய்த் தான்றி ருத்தல்
உண்டியிற் கழகாம் விருந்தோ டருந்திடுந
லூர்க்கழகு சற்ச னர்களாம்
உற்றசிறி யோர்க்கழகு வினைமிக விளைத்தல்பெரி
யோர்க்கழகு பிழைபொ றுத்தல்
மண்டல மதற்கழகு கோடையுங் காலமு
மாறாமல் விளைதல் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்சுறுப் பணசா மியே. 11

## இதற்குயர்ந்ததில்லை யெனல்

பெற்றெடுத் தருமையாய் வளர்த்ததாய்க் கதிகமாய்ப்
பேசவுப மான மில்லைப்
பிதாவாக் கியத்துக்கு மேலாய் மொழிந்திடப்
பெரியமந் திரமு மில்லை
நற்றவத் தால்வந்த வறிவுடைய மைந்தர்நிக
ரானபாக் கியமு மில்லை
நாயகனை யல்லாது பெண்களுக் குற்றதுணை
நானிலந் தன்னி வில்லை

---

பாட்டு 11: தண்டமிழ் - தண்மைXதமிழ். கிளை – சுற்றம். சமர் – போர். சதுரங்கம் – தேர், யானை, குதிரை, காலாள் ஆகிய நால்வகைப் படை. கொழுநர் – கணவர். சற்சனர் – நற்குணமுள்ள மக்கள். மண்டலம் - பூமி.

பாட்டு 12: உபமானம் – உவமை, ஒப்பான பொருள். பிதா – தந்தை. பாக்கியம் – செல்வம். நாயகன் – கணவன். நானிலம் – குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நால்வகை நிலங்கள், பூமி. சக்கிரவாளம் - வட்டாரம்,

கற்றுணர்ந் திடுஞான நூலுக்கு மேலான
காவியத் தானு மில்லை
கடும்பசிக் குதவன்ன தானத்தை யன்றிக்
கதித்தபுண் ணியமு மில்லை
மற்றுனக் கிணையான தெய்வங்க ளுயர்சக்கிர
வாளத்து ளில்லை கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 12

## அளவிடாமை

பதிகர்வெகு தொலைவழியின் மேனடை நடப்பதும்
பாஞ்சாலி துகினீ ளமும்
பரிசட்டு சாரட்டு வண்டியின் சுற்றுநற்
பல்காவி யத்தெ ழுத்தும்
அதிகவட் சயபாத்திரத் தின்பிர தாபமு
மனுமரா மனத்தையி ரியமும்
அகிலபுவ னத்திற் சனத்தையும் பட்சித
மடவியி லுலாவு மரமும்
நதிபதி யினிற்கப்பல் நாடிடஞ் செலுமளவில்
நடுவில்நிற் கின்ற விடமும்
ஞானமுற் றோர்தவப் பெருமையுங் கிரீடபதி
ராமபா ணத்தின் வலுவும்
மதியினா லேவருநின் மகிமையுங் கண்டதை
வழுத்துதற் கெளிதா குமோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 13

---

பாட்டு 13: பதிகர் – வழி நடப்போர். துகில் – ஆடை. பரி – குதிரை. சாராட்டுவண்டி – குதிரை பூட்டிய வண்டி. அட்சய பாத்திரம் - பாண்டவருக்குச் சூரியன் கொடுத்த பாத்திரம். பிரதாபம் – புகழ். கிரீடபதி – முடிதரித்தவன்,

## அதிகமிது வென்பது

செகமீதி லாயிரத் தெட்டுச் சிவாலயந்
தரிசிப்ப ததனி லதிகந்
தினமுமற வாமலே சிவசிதம் பரமெனத்
தியானமே செய்வ ததிகம்
பகருநூற் றெட்டுத் திருப்பதியை நாடிப்
பணிந்திடுவ ததனி லதிகம்
பரிவாக ராமகீர்த் தனமது விடாமற்பா
ராயணஞ் செய்வ ததிகம்
அகமகிழ்ந் திமசேது காசியிற் போய்க்கங்கை
யாடிவருவ ததனி லதிகம்
அருந்தவம் புரிகின்ற பெரியவர்க் கொருகவள
மன்னங் கொடுப்ப ததிகம்
மகநூறு செய்வதனி லதிகமாங் காரத்தை
மாற்றுவது தானதி கமாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 14

## இதனாலிது உண்டாமெனல்

ஈட்டமுற் றிடுமன திரக்கமுண் டானவ
ரிடத்தினிற் றயவு முண்டாம்
இன்பமுற் றிடுதயவு தானுமுண் டானவ
ரிடத்தினிற் பொறுமை யுண்டாம்
நாட்டமிகு பொறுமையுண் டானவ ரிடந்தன்னில்
நல்லகுண சாந்த முண்டாம்
நல்லகுண சாந்தமுண் டானவ ரிடத்திலென்
னாளும்வள ரன்பு முண்டாம்

---

பாட்டு 14: செகம் - பூமி. கவளம் - வாயளவு கொண்ட உணவு. மகம் - யாகம். ஆங்காரம் – அகங்காரம், இறுமாப்பு.

பாட்டு 15: ஈட்டம் – திரட்டிய பொருள். தயவு–இரக்கம். சாந்தம் - பொறுமை. ஈகை – கொடை. வாழ்வு சரகீர்த்தி - வாழ்வுxஉசரxகீர்த்தி. உசர - உயர - ஓங்க.

ஆட்டமிகு மன்புமுண் டானவ ரிடந்தன்னி
லளவற்ற யீகை யுண்டாம்
அளவற்ற யீகையுண் டானவ ரிடந்தன்னி
லதிகபுண் ணியமு முண்டாம்
வாட்டமில் லாப்புண்ணிய முற்றவ ரிடத்திலங்கு
வாழ்வுசர கீர்த்தி யுண்டாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 15

## இராமாயணப் பெருமை

ராமர்கதை வான்மீகர் வடமொழியி லிருபத்து
நாலா யிரஞ்செய் ததனை
நவரசத் தமிழினாற் கம்பருந் தான்பன்னீ
ராயிர விருத்த மாகச்
சேமநிதி போற்செயும் விருத்தமத் தனையுமே
சீர்கா ழியரு ணாசலஞ்
சித்திரம தாகயெழு நூறுபத மாகவுஞ்
செப்புமிம் மூன்று நூலை
பூமண்ட லந்தன்னில் யாவருங் கேட்கப்
புகன்றுபட் டாபி டேகம்
பொருந்தவுஞ் சூட்டிப் பணிந்துமன் பாகவும்
போற்றித் துதிப்ப ததனால்
மாமகிமை பெற்றரா மாயணத் துக்குவமை
மற்றொன்றைப் பேச வருமோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 16

---

பாட்டு 16: நவரசம் - ஒன்பது சுவை. சேமநிதி-புதையல். சித்திரம்-அழகு. பதம் - இசைப் பாடல். மூன்றுநூல்கள் - வால்மீகி இராமாயணம், கம்ப ராமாயணம், அருணாசலக் கவிராயரின் இராம நாடகம்,

## இதற்கிது உயர்வெனல்

ஆதிநூல் தன்னி லுபநிடதம் புராணத்தி
லாலவாய் விளையா டலாம்
ஆபரண மதனிற் கவுத்துவமா மணிசங்க
மதனிலே பாஞ்ச சன்னியம்
சோதியிற் சூரியன் மலையினிற் கயிலைமலை
சுவையிற் றமிழ்ச்சுவை யதாம்
சுகிர்தத்தி லேதருமர் கொடையினிற் கன்னன்
துலங்கும்வாழ் விற்கு பேரன்
சாதியினி லந்தணர் மிருகந் தனிற்கபிலை
விரதத்தி னிற்கொல் லாமையாம்
தவத்தில்மார்க் கண்டனுல கத்தினிற் பொன்னுலகு
தருவதனில் வில்வ மரமாம்
மாதரை யினில்திரு விளக்கிலே கற்பூர
மணிவிளக் கதிக மாகும்
மணிகொழித் திடும்வேலை நகர் செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 17

## பூர்வபுண்ணியரிவர்

இருமரபில் மறுவிலாக் கற்பழகு மங்கையை
யிசைந்துமண மாலை சூட்டி
இதயமொன் றாயிருவர் சவுபரிய ரெனமக்க
ளிம்மையிற் பெற்றெ டுத்துப்
பெருகுசீர் வயதுசற் றுங்குறைவி லாமலே
பிணியிலவ திப்ப டாமற்
பிறையாயி ரந்தொழுது முத்தொட்டில் கட்டியே
பிரபலம தாய்வந் தபேர்க்

---

பாட்டு 17: ஆதிநூல் - வேதம். ஆலவாய் விளையாடல் - திருவிளையாடற் புராணம். கவுத்துவ மாமணி - பதுமராகமணி. சங்கம் - சங்கு பாஞ்ச சன்னியம் - திருமால் கரத்திலுள்ள சங்கு. சுகிர்தம் - அறம். கன்னன் - கர்ணன். கபிலை - கருமை கலந்த பொன்மை நிறம். காராம்பசு. பொன்னுலகு- தேவர் உலகு. தரு - மரம்.

பாட்டு 18: இருமரபு - தாய் வழி, தந்தை வழி. சவுபரியர் - வீரமுள்ளவர். அவதி - துன்பம். ஆயிரம் பிறை கண்டவர் - 80 ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்தவர். முத்தொட்டில் - மூன்று தொட்டில்கள் - தன்மகன், பெயரன், பெயரன் மகன். புருட சிங்கம் - ஆண் சிங்கம்.

கருள்புரிந் தன்னமிட் டுத்தரும வழியில்நின்
றவரவர் குலத்தி னுக்கே
யடுத்தநற் றொழில்செய்து மானமது தவறிலா
தார்க்குநல் லவனென் னவே
வருபுருட சிங்கமென வாழ்வனவன் புண்ணிய
வானென்று ரைப்பர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 18

## பூர்வ பாபிகளிவர்

தாலிமனை யாட்டியென வாங்கார தாடகை
தனைக்கொண்டு மணமு டித்துச்
சலட்சணமிலாதபெண் ணானூமை குருடுகூன்
சந்ததி களைப்ப யின்று
நீலிதொடர் செட்டியென யிருவருஞ் சந்தியினி
னின்றுமா னங்கு லைந்து
நேராக வந்திடும் விருந்தினைக் கண்டஞ்சி
நெஞ்சக மிகக்க லங்கிக்
கேலியுல கினிலுள்ள பேர்களு நகைத்திடக்
கிளைஞரெல் லாம்ப ழிக்கக்
கேவலம தாயிரவு பகலாக மாறாக்
கிலேசமேற் கொண்டு வாடி
வாலிப மதிற்துயர மெய்துவோர் தான்கொடிய
மாபாவி யென்பர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 19

---

பாட்டு 19: தாடகை - ஒரு அரக்கி, மானங் கெட்டவள். சலட்சணம் - அழகு கூடிய. நீலி - பழையனூர் நீலி கதை. சந்தி - பலவழி கூடுமிடம், நடுத் தெரு. மானம் - பெருமை. கிளைஞர் - சுற்றத்தார். கிலேசம் - கவலை. வாலிபம் - இளவயது.

## நேத்திர விசேடம்

காலிருந் தெனமுழங் காலிருந் தென்ன மேற்
கவானிருந் தென்ன விடையுங்
கனல்வயி றிருந்தென்ன மார்பிருந் தென்னயிரு
கைதா னிருந்து மென்ன
மேலிருந் தென்முதுகு தானிருந் தும்பிடரி
பின்புய மிருந்து மென்ன
மிடறிருந் தென்னமுக மதுதா னிருந்தென்ன
மேவல கிருந்து மென்ன
தாலிருந் தென்னவாய் தானிருந் தென்னதிலத்
தாதமு மிருந்து மென்ன
தாமிருந் தென்னமூக் கொடுகா திருந்தென்ன
சகலமு மிருந்து மென்ன
மாலிருந் தாடுபைய மானக ணிரண்டிலா
மனிதர்க ளிருந்து மென்ன
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 20

## பெண்கள் சொற் கேட்கலாகாதெனல்

கூனி சொற் கேட்டதால் கைகேசி வாழ்வுங்
குலைந்துதச ரதரிறந்து
கோதண்ட ராகவ னிலக்குவன் சானகி
கொடுங்கா டுறைந்து விட்டார்
கானில்வரு சூர்ப்பணகி வார்த்தையாற் தென்னிலங்
காபுரித் துரைரா வணன்
கனகிளையு மைந்தருஞ் சதுரங்க முஞ்சமர்க்
களமதிற் றானி றந்தார்

---

பாட்டு 20: கவான் – தொடை. தால் – நாக்கு. மிடறு – கழுத்து. அலகு–கன்னம். மால் – கருமை, கரிய கண் பாவை. உபயர் - உதவி.

பாட்டு 21: கான் - காடு. சதுரங்கம் – நாற்படை. சந்திராதித்தன் - சந்திரன்Xஆதித்தன்.

மேனியஞ் சாநீவி மொழியினாற் பழையனூர்
வேளாளர் தானி றந்தார்
வீணான பெண்புத்தி கேட்பவர்க் களவிலா
வினைவந்து சேரு மென்பார்
வானிலகு சந்திரா தித்தருந் தவழ்சோலை
மாமலை தனக்கதி பனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 21

## மூடர் குணமறியாரெனல்

தாமரையின் மலர்மண மடுத்தமண் டூகந்
தனக்குத் தெரிந்தி டாது
சங்கீத வித்தையி னயங்களுஞ் செவிடர்கள்
தனக்குத் தெரிந்தி டாது
காமரச மின்னார்கள் கலவியின் சுகமன்ன
கர்க்குத் தெரிந்தி டாது
கரும்புருசி தந்தமே யில்லாத கிழவர்தங்
கட்குத் தெரிந் திடாது
பூமண்ட லந்தனிற் பசுவருமை சற்றும்
புலிக்குத் தெரிந்தி டாது
புகலரிய குருடர்க்கு ரத்தினப் பரிட்சையெப்
போதுந் தெரிந்தி டாது
மாமதுர கவியருமை முழுமூட ருக்குவொரு
வகையுந் தெரிந்தி டாது
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 22

---

பாட்டு 22: மண்டுகம் – தவளை. மின்னார் – பெண்கள். தந்தம் - பல்.

## பிறர்மனை விரும்பிற் கேடு தப்பாதெனல்

சினத்தமத வெறியினா லிந்திரன் கெவுதமர்
தேவியக லிகைதன் னைமுன்
சேர்ந்ததீ வினையினா லாயிரங் கண்ணவன்
றேகமெல் லாம்பெற் றனன்
அனத்தமென் றெண்ணாம லேகுரு வியாழன்மனை
யாட்டிதனை யேசந் திரன்
ஆசையாற் றோய்ந்ததாற் றேய்ந்துவள ருடலதா
யகலாத சாப முற்றான்
கனத்தகற் புடையபாஞ் சாலியைக் கீசகன்
கண்டுமயல் கொண்டி றந்தாள்
கனவாலி தம்பிகா தலியின்மே லுற்றவிர
கத்தினா லேம டிந்தான்
மனத்தினாற் பிறர்பாரி யைச்சேர வெண்ணில்வினை
வருவதற் கிதுசாட் சிகாண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 23

## கோபத்தால் வந்த கொடுமை

வெஞ்சினத் தால்விசுவா மித்திரன் திரிசங்கு
வேந்தன்மைந் தனையி டுக்க
மேசெய்து பலியாது னாலேதன் றவமெலாம்
வீணிற் கெடுத்து விட்டான்
பஞ்சவர்ப் பகடஞ் செய்துதுரி யோதனன்
பாழா கவேம டிந்தான்
பற்பமா ரிசியவன் செய்யாது செய்ததாற்
பட்டுமிட் டான்சாம் பராய்க்

---

பாட்டு 23: மதவெறி – காமவெறி. தேகம் – உடல். அனத்தம் – அழிவு. வியாழன் - தேவகுரு. மனையாட்டி - மனைவி. மயல் – ஆசை. பாரி – மனைவி.

பாட்டு 24: வெஞ்சினம் – வெம்மைxசினம் – கடுங்கோபம். இடுக்கம் – துன்பம். பஞ்சவர் – பாண்டு மக்கள். பகடம் – தந்திரம். பற்மமாரிஷி – ஒரு முனிவன். பட்டுவிட்டால் – அழிந்து விட்டான். கஞ்சன் – கிருஷ்ணன் மாமனாகிய அரசன். கன்னாளன் – கம்மாளன்.

கஞ்சனுந் தங்கச்சி பிள்ளையைக் கொலைசெய்த
காரணத் தால்ம டிந்தான்
கண்ணாளன் மதுரையிற் கோவலன் மனையாட்டி
கண்ணகியி னால ழிந்தான்
வஞ்சனைகள் செய்கின்ற பேர்களை விடாதது
வளைத்துகொன் றிடுமென் பர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 24

## பிரிக்கப் படுபவை

பாலையும் புனலையும் பருகிவா யாலனப்
பட்சிவே றாய்ப்பி ரிக்கும்
பண்பான நெல்லையும் பதரையுங் காற்றது
படிந்துவே றாய்ப்பி ரிக்கும்
ஆலையா னதுபைங் கரும்பையும் ரசத்தைய
மரைத்துவே றாய்ப்பி ரிக்கும்
ஆனயெள் ளையுமெண் ணெயுந்திருகு செக்குநின்
றாடிவே றாய்ப்பி ரிக்கும்
சோலைமா மலரையு மணத்தையு முகிழ்த்துச்
சுரும்புவே றாய்ப்பி ரிக்கும்
சொல்லையும் பொருளையுங் கற்றகவி வாணர்தாம்
துண்டுதுண் டாய்ப்பி ரிப்பார்
மாலைமர கதமணியை வாசமிகு பூவையை
மதித்தபரி மளமெய் யனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 25

---

பாட்டு 25: அனப்பட்சி – அன்னப் பறவை. புனல் – நீர். சுரும்பு – வண்டு. கவிவாணர் – புலவர். பூவை – காயாம்பூ.

## மகிமை யறியாரிவ ரெனல்

வெண்மைதரு பால்சீனி கற்கண்டு ருசிதனை
வெடித்திடுங் கமரறி யுமோ
மிருகமத களபவா சனைதனைச் சிற்றூரில்
மேவும்வே டர்களறி வரோ
தண்மைதரு செங்கரும் பாலடித் திடுமருமை
தான்கடா மாடறி யுமோ
சமராடு மரணசுத்த வீரர்கள் மனத்திறந்
தான்பேடி யறிவ துண்டோ
திண்மைதரு கனசிலம் பத்தருமை மண்சுமந்
திடுமொட்டர் தாமறி வரோ
சிவபூசை நியமங்கள் முற்றுமத பேதஞ்
செறிந்தசோ னகரறி வரோ
வண்மைதரு மறிவுடைய பெயரருமை சற்றுமட
மட்டிகளு மேயறி வரோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 26

## பயன் படாதது

விரிவான கடல்தனி லலைமுழங் குவதழகு
வெண்மைநுரை பொங்கி லென்னாம்
மேதினி செழிக்கமழை பொழிவது நலந்தவளை
வீணா யிரைந்து மென்னாம்
அரிதான பயிர்களொடு கொல்லையிற் றீபூடு
வதுதான் முளைத்து மென்னாம்
ஆனமலர் பூப்பது மணந்தாழை யிற்காய்க
ளதிகமாய்க் காய்த்து மென்னாம்

---

பாட்டு 26: மிருகமதம் – கத்தூரி. களபம் – கலவைச் சாந்து. கடாமாடு – ஆண் எருமை. சமர் – போர். பேடி – அலி. சோனகர்—முகமதியர். மட்டி – அறிவில்லாதவன்.

பாட்டு 27: மேதினி – பூமி. இரைதல் – சத்த மிடுதல். கொல்லை – புன் செய் நிலம். தீபூடு – பயனற்ற புல் பூண்டுகள். வனசமலர் – தாமரை மலர். கனம் – பெருமை. சற்புத்திரர் – நன்மக்கள். கசடர் – கீழ்மக்கள்.

பெரியாணி முத்துடன் கூடநீர் முத்தும்
பிறந்திடிற் காரிய மென்னாம்
பெருகும்வா வியில்வனச மலர்வது கனந்தரும்
பெயர்கொட்டி பூத்து மென்னாம்
மரியாதை பெற்றசற் புத்திர ருடன்கசடர்
வளமொடு பிறந்து மென்னாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 27

## இதற்கிது உறவில்லை யெனல்

சிங்கந் தனக்குங் கவுட்குழியில் வெள்ளந்
திரண்டொழுகு மதக ரிக்குஞ்
சினந்தெழு புலிக்குங் கதித்தினம் பிரியாது
சேர்ந்துவரு மான்ற னக்கும்
வெங்கண் சிவப்புறாப் பாய்ந்திடுங் கீரிக்கும்
விடமுற்ற வரவி னுக்கும்
மிகுதண்டை வாங்கிப் பதுங்கின்ற பூனைக்கும்
வீட்டிலுற் றிடுமெ லிக்கும்
அங்கமுற் றிடுவலு நரிக்குந் தினங்கிடையி
லடைகின்ற வாட்டி னுக்கும்
அறிவுடைய மெஞ்ஞான முற்றவர்க் குஞ்சற்று
மறிவிலா மூட ருக்கும்
வங்கணந் தானு மிலையென நீதிகளும்
வழுத்துமென் பார்கள் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 28

---

பாட்டு 28: கவுட் குழி –கவுள் x குழி. யானையின் கதுப்பு, யானையின் மதம் பாயுமிடம். அரவு – பாம்பு. கிடை – பட்டி. வங்கணம் - உற்ற தோழமை

## இதிலிது செல்லாதெனல்

சண்பகம் பூத்தமலர் வேங்கை மரமீ
திலிற்றான் வண்டு செலாது
தைக்குமுட் டாழையின் காட்டினிற் கரடியுஞ்
சஞ்சரிக் கச்செ லாது
பண்புறு புதுப்பானை தன்னிலே ஈயும்
பறந்ததிற் றான்செ லாது
பகரும்வேப் பெண்ணெயின் கலசத்தை நாடியே
பார்க்கெறும் புஞ்செ லாது
திண்புறு மிரும்புதனி லெந்தெந்த நாளுஞ்
செழித்தகறை யான்செ லாது
செல்வக் குபேரர்க ளிடத்திலெப் போதுந்
திறத்தகலி யுஞ்செ லாது
மண்புவியி லீயாத உலுத்தர்பாற் பாவாணர்
மனமதுந் தான்செ லாது
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 29

## துர்ச்சனரை வசமாக்கா தெனல்

புடமிட் டிரும்பையும் பொன்னெனச் செய்யலாம்
பொங்கிய சமுத்தி ரத்தின்
புனலையு மிறைக்கலாங் கயிலாச கிரிதனைப்
போய்க்கண்டு தினம்வரு கலாம்
திடமுற் றிடும்புலியி லேபால் கறக்கலாஞ்
சித்திரத் தையு மாட் டலாஞ்
சேணுற்ற ககனத்தின் மீதுலவு நட்சத்
திரத்தையெண் ணிச்சொல் லலாங்

---

பாட்டு 29: சஞ்சரித்தல் - வாழ்தல். கலசம் - குடம். கலி - வறுமை. உலுத்தர் - ஈயாதவன், உலோபி. பாவாணர் - புலவர்.

பாட்டு 30: புடமிடுதல் - உலோகம், மருந்து இவற்றைத் தூய்மை செய்தல் சமுத்திரம் - கடல். ககனம் - ஆகாயம். உருக்குவடம் - இரும்புக்கம்பி. துர்ச்சனர் - துஷ்டர்கள்.

குடமதிற் காற்றைப் பிடித்ததி லடைக்கலாங்
கோதையர்கள் மனதறி யலாங்
கூடுவிட் டுக்கூடு பாயலா மனதுதான்
கூசாம லேயு ருக்கு
வடமதில் நடக்கலாந் துர்ச்சனர்கள் புத்திதனை
மாற்றுவது அரிது கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 30

## விதியை விலக்கரிதெனல்

குருகுலத் தரசர்க்கு வந்திடு மிடுக்கணுங்
கூடலிற் சொக்கர் பிட்டுக்
கூலிக்கு மண்சுமந் தடிகள்பட்ட அவதியுங்
கோவிந்த னான கிட்டிணன்
பொருமநின் றழுதவனு முரலினிற் கட்டுண்ட
புதுமையு மரிச்சந் திரன்
பொற்கொடியு மைந்தனுந் தானும்விலை யாயடிமை
போனகா ரணமகி மையும்
தருமமே செய்துமற் றுமவன் சிறையினிற்
றானுமடை படுது யரமுந்
தானிதைக் கேட்டவர்கள் மனதுருகி யிருகணீர்த்
தாரையாய் விடுவ ரதனால்
மருமவிதி யையறியாப் பிரமாதி யாலுமதை
மாற்றுவது மரிது கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 31

---

பாட்டு 31: இடுக்கன் – துன்பம். கூடல் – மதுரை. பிரமாதி – பிரம்மம் x அதி. கடவுள் முதலானவர்கள்,

## செய்வன திருந்தச் செய்யெனல்

அதியாசை யால்யானை யென்றுகுரு புத்திரனை
யன்றுபா ராம லெய்தே
அந்தரிசி சாபத்தி னாலேதச ரதருமுன்
னவதியாய்த் தானி றந்தார்
யெதிரான சுக்கிரீ பன்பொருட் டால்மறைந்
தெய்ததால் நிந்தை யாக
யேசாது மேசவே வாலிதான் ராகவ
னேழைபோற் கேட்டு நின்றான்
பதியாவ தேதனனெஞ் சங்குலைத் தைவர்
பகைகொண்டு தானி றந்தான்
பதறாத காரியஞ் சிதறாது யென்றுமுன்
பழமொழி யுரைத்த தபோல்
மதியீறு நல்லோர்கள் செய்வினை திருந்தவே
வழிபடச் செய்வ ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 32

## சவமெனப் படுவார்

சடைமுடி யதாய்ஞான பின்பெண் களைத்தான்
சேருவோ னொரு சவந்
தன்குல நடத்தைதனை விட்டுமா னத்தைத்
தவிர்த்தலைந் தவனொரு சவம்
படையதனி லாயுத மெறிந்தெதிரி பக்கல்போய்ப்
பணிகின்ற வனொரு சவம்
பழையதா யாதிதனை நம்பியுற் றத்தனது
பாராட்டு வோனொரு சவம்

---

பாட்டு 32: ஏசுதல் - திட்டுதல். ஏழை - வறுமை யுற்றவன்.

பாட்டு 33: சவம்—பிணம். குறளி-குறளை - கோள் சொல்லுதல். மடையர்-அறிவில்லாதவன்.

கொடையிலாச் செல்வம் படைத்தவ னொருசவங்
குறளிசொல் பவனொரு சவம்
குழந்தைசண் டைகளினுக் கேற்றுநாய் போலக்
குலைக்கின்ற பேரொரு சவம்
மடையருட னுறவாடி வாடுவோ னொருசவ
மனிதரிற் சவமென் பர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 33

## நரக வேதனைப் படுவரிவர்

ஐயமிட் டுண்டிடார் மானங் குலைந்தபே
ரனியாய விலைகள் விற்போர்
அந்தணர்கள் பூமியைக் கபடமாய் வாங்கினோ
ரருங்கடன் பட்ட பேர்கள்
செய்யாது செய்தபேர் தேவால யத்தினிற்
சேயிழை தனைச்சேர்ந் தபேர்
திருநீறு பஞ்சாக் கரத்தைநினை யாதபேர்
சிவபூசை தனைவிட் டபேர்
சையோக மாய்க்கன்னி யழியாத பெண்களைத்
தழுவிக் கெடுத்த சிறியோர்
தருநதியி னிர்வாண மாய்நின்று மூழ்கினோர்
சமயமது தான்கு லைந்தோர்
மையமாய்க் கைக்கூலி வாங்கினோ ரிவர்நரக
வாதனைப் படுவர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 34

---

பாட்டு 34: ஐயம் - பிச்சை. கசடம் - வஞ்சகம். சேயிழை - பெண். பஞ்சாக்கரம் பஞ்சம் X அக்கரம் - ஐந்தெழுத்து. சையோகம் - கலத்தல். நிர்வாணம் - ஆடையின்மை. கைக்கூலி - லஞ்சம்.

அழிதகை யுடையோரிவ ரெனல்

புண்ணியஞ் செய்பவர்க் கிடையூறு செய்குவோர்
புராணங் களைப்ப ழித்தோர்
பூவையரை நடுவழியில் விட்டேகி னோர்பஞ்ச
பூததய வில்லா தபேர்
கண்ணிபொறி வலைதூண்டில் படுகுழி சமைத்தபேர்
கணவரைத் தானி ழந்த
கன்னியரை மருவினர் வயிற்றிடை செனித்திடுங்
கருவதைத் தான ழித்தோர்
யெண்ணிமுன் பின்புபா ராமலே ஞாயங்க
ளேறுமா றாயு ரைப்போர்
யினியசிவ சொத்திலே யாசித்த பேர்குதி
யேழைக் கிடுக்க ணிடுவோர்
மண்ணின்மே லிவர்கள்தமை வாய்பேசு பிணமென
மதித்திடக் கடவ தன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 35

பருத்தியின் மேன்மை

சிற்பருக் களவுநூ லாகமஞ் சொன்மந்தி
ராதீன மாங்கும் பனூல்
தீபத்தை யேற்றுநூல் தாலியைச் கட்டுநூல்
திருவிழாச் செய்காப் புநூல்
பொற்பணிகள் கோர்க்குநூ லிருபிறப் பாளரைப்
புனிதஞ் செயும்பூ ணநூல்
புத்தகக் கயறுநூல் தெய்வமா னிடராடை
புனையமா னங்காக் குநூல்

---

பாட்டு 35: பூவையர் - பெண்கள். ஏகுதல் - போகுதல். மருவுதல்-கலத்தல்.

பாட்டு 36: மந்திராதீனம் - மந்திரம்Xஆதீனம். ஆதீனம் - ஆளுகை. இருபிறப்பாளர் - அந்தணர். இருபிறப்பு - உபநனயத்திற்கு முன்பும் பின்புமான பிறப்பு. பூணநூல் -பூணூல். கற்பக விருட்சம் - வேண்டியதைத் தரும் மரம். மற்புயாசலன் - மல்Xபுயன்Xஅசலன் - மலைபோன்று அசையாத தன்மையுடையவன்.

கற்பனைக ளானதெல் லாஞ்சமைந் தேயலங்
காரஞ்செய் நூலா கையாற்
கற்பக விருட்சமா மென்னப் பருத்தியைக்
கருதலா மென்பர் நூலோர்
மற்புயா சலன்ராம சாமிசொல் செந்தமிழின்
மாலைபுனை யுபைய சரணா
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 36

## நீரின் சிறப்பு

கல்லின்மண் செம்பினிற் தெய்வமென மந்திரக்
கருமமுற் றிடுகும் பநீர்
கன்னிகா தானமுத லாய்த்தான முஞ்செய்வோர்
கையினால் வார்ப்ப துவுநீர்
இல்லறங் கட்டுவது நீர்சுத்த மாக்குவது
மேற்றபுண் ணியதா னநீர்
யிசைதான பானநீர் காசியிம சேதுவினி
லேயதுவோ ராடு வதுநீர்
நெல்லினை வளர்ப்பதுவு நீரதை யவித்திடுத
னீரன்ன மாக்கு வதுநீர்
நேயவறு சுவைகளுண் டாக்குவது நீர்விரத
நியமநெய் வேத னமுநீர்
மல்லலுறு முலகிலுயி ரெல்லாந் தழைத்திட
வளர்ப்பதுவு நீரென் னலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 37

---

பாட்டு 37: கருமம் - செயல். நியமம் - முறைமை. நெய்வேதனம் - நிவேதனம் - நைவேத்தியம் - தேவர்க்கு அளிக்கும் பூசை முதலியன,

## இதற்கிது சரியாகாதெனல்

கருங்காலி வயிரந் தனக்கிணைய தாய்ப்பெருங்
கற்றாழை நிகரா குமோ
கஞ்சமல ருக்கிணைய தாய்க்கொடிக் கால்முருக்
கம்பூவு நிகரா குமோ
தருங்காம தேனுவுக் கிணையாக வேபசு
தானுமே நிகரா குமோ
தரித்திடில் மணக்குஞ் சவாதினுக் கிணையதாய்ச்
சாணிதா னிகரா குமோ
அருங்கா விரிக்கிணைய தாய்நடுவில் வற்றிய
வரங்கமது நிகரா குமோ
அழகுற்ற வன்னத்தி னுக்கிணைய தாய்முகடி
யவள்கொடியு நிகரா குமோ
மருங்கான சாதிமா னுக்கிணைய தாயீன
மானகுல மக்க ணிகரோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 38

## ஒருநாளுந் தீராத்துன்ப முறுவரிவர்

கற்றார்க ளுறவுதனை விட்டுமுழு மூடவர்வங்
கணமது பிடித்த பேருங்
கனகமுடி மன்னவர் குறிப்பறிந் தேநடக்
காமற் றிரிந்த பேரும்
பெற்றார்கள் மனதுருகி வாடவெகு தருமங்கள்
பெருமையாய்ச் செய்த பேரும்
பெண்டாட்டி பிள்ளையை நம்பியே கூடப்
பிறந்தவரை விட்ட பேரும்

---

பாட்டு 38: – கருங்காலி வயிரம் – கருங்காலி மர வயிரம். கஞ்சமலர் – தாமரை மலர். அரங்கம் – ஆற்றிடைக் குறை. முகடி – மூதேவி.

பாட்டு 39: வங்கணம் – நட்பு சாதிமான் – நற்குலத்தோர். கனகமுடி – பொன்முடி. அன்னியர் – உறவினர் அல்லாதார். நேசம் – நட்பு. வராகி – பன்றி. ஊடாடுதல் – உலவுதல். ஊருணி – ஊரார் நீருண்ணும் குளம்.

உற்றாரை யும்பகைத் தன்னியரை நேசமா
யுண்டென் றிருந்த பேரும்
யொழியாது துன்பங்கள் பெற்றிடுவர் வராகி
யூடாடு காடு போலாம்
வற்றாத கிளைதாங்கி யூருணிக் கரையதனில்
வாசஞ்செய் பரிபூ ரணா
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 39

## குரவர் வழிபாட்டு விசேடம்

பயபத்தி விசுவாச மாகப் பிதாமொழிப்
படியிளமை தன்னில் நல்ல
பருவத்தின் மின்னார்கள் மோகாந்த காரவன்
பகையைக் கடிந்து பண்பாய்
நயமுற்ற சற்குரு மகிழ்ச்சிபெற நாடோறு
நடந்துநிலை தவறி டாமல்
நறுநீர் பிரித்தமுத முண்குருகின் ஞாயமென
நன்னூல்கள் கற்ற வர்க்கு
செயமுற்ற மாதா பிதாபாரி மூவர்தன்
செல்வமெல் லாங்கொ டுக்கும்
திருமாது முன்னிற்பள் கற்பகம் போலவே
சென்றவிட மீது சொர்ண
மயமாக வேபொழிந் திடுமுலகி னிற்கீர்த்தி
மகிமைப்பிர பலமெய் துவார்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 40

---

பாட்டு 40: விசுவாசம்– நம்பிக்கை. குருகு – அன்னப்பறவை. பாரி-மனைவி
சொர்ணம் – பொன். கீர்த்தி – புகழ்.

## தெய்வப் புலமையரிவர்

எடுத்தடி முடங்காம லினியசந் தப்புக
ழிசைத்திடுவ ரருணை கிரியார்
யிதயமுரு கத்தமி ழாக்கமாய்ச் சொல்வர்மா
ணிக்கவா சகர்மது ரமாய்
நடுத்தலை கடைக்குறை யிலாதுதிட மாய்ச்சொல்வர்
ஞானசம் பந்த மூர்த்தி
நன்னயம தாகஅன் பாய்க்கவி யுரைத்திடுவர்
நாவலூ ரிற்சுந் தரர்
தடுத்தானு மடிமைகொண் டிடுவர்வெகு நேர்மையாய்த்
தான்சொல் வரப்பர் மதுரைச்
சங்கத்தி லொருவர்நக் கீரர்சொக் கேசர்சொற்
றமிழினிற் குற்ற மாய்ந்தார்
மடுத்தமுத முண்டதெய் வப்புலமை யானகனி
வாயரிவ ராகு மன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 41

## அரியசெய்கை யுடையரிவரெனல்

கனருசிய தானவூ னுண்டுபார்த் திட்டுமுன்
காளத்தி நாதர் தன்னைக்
காலா லுதைத்துயிரு கண்கொடுத் தருமையாய்க்
கண்ணப்பர் முத்தி பெற்றார்
அனதான மதுசெய்த யன்பினாற் செங்காட்டி
னையன்மொழி தவறி டாமல்
அரியபிள் ளைக்கறி சமைத்துச் சிறுத்தொண்ட
ரழியா வரங்கள் பெற்றார்

---

பாட்டு 42: கனருசி – மிகுந்த சுவை, ஊன் – இறைச்சி பாயல் – படுக்கை, தகமை – பெருமை.

தனதாக வொருபாய லிற்சயன மாய்த்தொண்ணூற்
றாறுவய தாம்வ ரைக்கும்
தரணியிற் றிருநீல கண்டர்மனை யைத்தொடாத்
தகமையாற் பேறு பெற்றார்
மனதயிரிய மாகயினி யிப்படிச் செய்பவர்கள்
வையகந் தன்னி லுண்டோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 42

## கிரக காரகம்

தந்தைதரு வனாவி சுகந்தமா லிகைகலன்
றாயையுந் திங்க டருவன்
சகோதரன் பூமிதரு வன்செவாய் புதன்வித்தை
தான்ஞா னந்தரு குவன்
அந்தணன் மெய்ச்சவுக் கியம்வேத சாஸ்திரமு
மானபுத் திராள்தரு குவன்
அசுரமந் திரிமனைவி வாகனந் தருகுவ
னாயுள்கெ சேந்திர பாக்கியம்
நந்தாத தேசா தித்தியஞ் தருகுவன்
ராகுமிகு போக பாக்கியம்
ரஞ்சிதம தாகவே முத்திமோட் சந்தருவன்
கேது செனன காலம்
வந்துசம மாகவே கேந்திரந் திரிகோண
மருவின மானிடர் தமக்கே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 43

---

பாட்டு 43: தந்தை – சூரியன். ஆவி – உயிர். சுகந்த மாலிகை – மணமாலை. கலன் – அணிகலன். அந்தணன் – வியாழன் அசுரமந்திரி. சுக்கிரன் – வெள்ளி. ஆயுள் – ஆயுட்காரன் – சனி.

## அமைச்சர்களின் விசேடம்

தேசப்பிர பலவரிச் சந்திரர்க் கினியசத்
        தியகீர்த்தி சேர்ந்த ததுபோல்
    திக்குவிசை யஞ்செய்த தசரதர்க் கேசுமந்
        திரனமைந் திடுதல் போல
காசிநக ரரசர்க்கு மதியூகி தானவன்
        கருத்துக் கிசைந்த ததுபோல்
    கனவிக்கிர மாதித்த னுக்குமே பட்டிவங்
        கணமா யமைந்த ததுபோல்
ராசகே சரிராய ருக்குப் பாச்சிதா
        னலமா யமைந்த ததுபோல்
    நானிலந் தனையாளு மன்னவர்க் கிவர்கள்போல்
        நட்பான மந்திரி கடான்
வாசலி லிருந்துவிடி னவர்கள்மனு நீதியும்
        வளர்ந்தேறி நிற்கு மன்றோ
    மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
        வளர்கறுப் பணசா மியே. 44

## சத்துருவெனப்படுபவர்

மிடியினாற் கனகடன் படுகின்ற தந்தையும்
        விபசாரி யான தாயும்
    வினவுசொற் கேளாத தம்பியு மிரண்டக
        மிகச்செய் திடுந்த மையனும்
கொடியதா டகைநேரு மனைவியுங் கபடமுறு
        குணமுற் றிடுந்தோ ழனும்
    கூட்டுறவு யில்லாத தாயாதியு மயிடங்
        கோரஞ்செய் திடுமா மியும்

---

பாட்டு 44: வங்கணம் – நட்பு. மனுநீதி – தருமநூல்.

பாட்டு 45: மிடி – வறுமை. இரண்டகம் – நம்பிக்கைத் துரோகம். நேர் – நிகரான. கபடம் – வஞ்சகம். மயிடம் – எருமை. சத்துரு – பகைவர்.

படியாத பிள்ளைகளு மன்பிலா மாமனும்
பண்பிலா மைத்துனை வரும்
பாரிற்றனக் கிவர்கள் சத்துரு வெனச்சொலப்
படுமென்ப ரறிவுடை யர்காண்
வடிவுபெறு மட்டமலை வெள்ளியம் பலமதில்
மகிழ்ந்துவிளை யாடு முதலே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 45

## தமக்குத்தாமே வினை தேடிக்கொள்வது

பாயிருட் குழலிய ரிரண்டுபெண் டீரையன்
பாய்க்கொண் டிருந்தி டுவனும்
பகர்வறுமை யாளர்க் கிரண்டூரி லேர்தான்
பணியாக வைத்தி டுதலும்
நாயினுங் கடையராய்ப் பொய்ச்சாட்சி சொல்வதுவு
நட்பினாற் பிணைப டுதலும்
ராசபா தையினிலமை யாய்நிலங் கொண்டுவெகு
நன்மையாய்ப் பயிரி டுதலும்
ஆயிரம் பேரெருது கட்டியுந் திருவிழா
யலங்கார மாய்ச்செய் வதும்
ஆகாத சல்லியங் கொடுவென்று சொல்லிவிளை
யாடுவதும் வன்கி ணறுதான்
வாயினாற் றூருவது போலவே வலியவினை
வரவழைத் திடும்வ கையதாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 46

---

பாட்டு 46: பிணை – கட்டுப்படுத்தல். சல்லியம் – நஞ்சு

## இப்படியானாலும் வஞ்சகருறவாகாதெனல்

அலையுநாய் பசுவாகி மொருவிலை யானாலு
மானகற் றாழை யதனில்
அரியவயி ரம்பிறந் திடினுங் கருங்காக்கை
யதுவெண்மை நிறமா யினும்
விலையதா யெட்கலம் வித்துநல் லெண்ணெய்தான்
வெள்ளமரு கால்போ யினும்
வீரமுற் றிடுபுலி பசித்துப் பசும்புல்லை
மேய்ந்துகளை யாறி னாலும்
நிலையான கற்பசு வில்பால் கறக்கினு
நெருப்புக் குளிர்ந்து விடினும்
நெட்டியிற் றண்ணீர் பிழியினும் பாம்பினடை
நெடியகால் கண்டு விடினும்
மலையினிற் றாமரை படர்ந்துபூத் திடினுமுழு
வஞ்சருற வாகா துகாண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 47

## சிறப்பில்லாப் பொருள்கள்

நளபாக மாகச் சமைத் திடினும் லவணமில்
லாதகறி ருசியு மில்லை
நளினமுக லக்ஷண மிலாதமின் னார்க்குமணி
நகைகளிட் டழகு மில்லை
அழகான கோபுர முடித்ததிற் சிகரம்வை
யாவிடிற் சோபித மில்லை
ஆயிரம் பொன்பெற்ற தேர்க்குமச் சுருவாணி
யதுவிலா துறுதி யில்லை

---

பாட்டு 47: எட்கலம் - எண்xகலம். களையாறல் - களைப்பாறுதல். கற்பசு - கல்xபசு. நெட்டி - ஒரு வகைப் புல். வஞ்சர் - வஞ்சகர். கீழ்மக்கள்

பாட்டு 48: இலவணம் - உப்பு. நளினம் - தாமரை. லக்ஷணம் - அழகு. மின்னார் - பெண்கள். சோபிதம் - அழகு. அச்சுருவாணி - தேரகத்தில் செறி கதிர்,தேர் உட்புறத்தில் நிறுத்தும் மரம். கனதை - பெருமை.

பளபளப் பாய்மதுர மெறியினும் பொருளிலாப்
பாவலங் கார மில்லை
பகரரிய செல்வவா னாகிலுங் கிளைஞர்தம்
பகைபெறிற் கனதை யில்லை
வளன்பதிகள் கவிஞரில் லாவிடில் பூமிகா
வலர்சபை சிறப்பு மில்லை
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 48

## சிறுமையிற் பெருமையுறுவன

விசிறியி லடங்கினற் காற்றுவெப் பங்களை
விலக்கிநளி னங்கொ டுக்கும்
வித்திலுற் றிடுபொருள்கள் பருவகா லத்தினில்
விளைந்துபல னைக்கொ டுக்கும்
புசபெலத் தினிலுற்ற சவுரியம் சமரிற்
பொருந்திச் சயங்கொ டுக்கும்
பூததய வினிலுற்ற புண்ணியஞ் செல்வப்
புகழ்ப்பிர தாபங்கொ டுக்கும்
நிசமதனி லுற்றறிவு பிரபஞ்ச மாயைதனை
நீக்கிமோட் சங்கொ டுக்கும்
நெடியவா னுற்றமுகில் புவனந் தழைத்திடவு
நிதமுமழை யைக்கொ டுக்கும்
வசனமீ தினிலுற்ற யின்சொல்லா னதுநல்ல
வனெனப் பெயர்கொ டுக்கும்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 49

---

பாட்டு 49: நளினம் - இங்கிதம் - இனிமை. வித்து - விதை. சவுரியம் - வீரம். சயம் - வெற்றி. பிரபஞ்சம் - உலகம். மோட்சம் - விடுபேறு.

## தீவினை வரும்வாறு

சூதுவிளை யாடலுங் கொலைகளவு செய்வதும்
சோர்வுதரு கள்ளுண் பதும்
துணிவாக வேகாம மதிலே மயக்கமுஞ்
சொற்குருவை நிந்திப் பதும்
தீதுபுரி கபடநா டகமுடை ய வஞ்சகர்
சினேகமுந் தேடா மலே
செலவழிக் கின்றவன் சீராட்டு மீறிய
சினத்தைத் தவிர்க்கா ததும்
மீதூண் விரும்புவதும் நாவடக் காததும்
மிகக்குறளி கோள்சொல் வதும்
வினையுற்ற சண்டையினில் நிற்பது மிலாபத்தை
மிஞ்சிவரு கின்ற செலவும்
வாதுமுற கின்றலும் வீணலத் தீயவினை
வந்ததென் றுரைசெய் யலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 50

## ஒவ்வொருவர்க் கொவ்வொன்றெளிமை யெனல்

தந்திர மதாகவொரு தூக்கணத் தான்குருவி
தான்கூடு கட்டு றுதியுந்
தன்வாயி னீரினாற் கரையா னிலத்தினிற்
றான்புற்று மண்வைப் பதும்
எந்தவித மோகொம் பர்க்காக வேயொரு
யெறும்புசேர்க் கின்ற நலமும்
யினையாற் சிலந்திதன் வாயினாற் செடியினி
லிசைத்துநெய் திடுபெரு மையும்

---

பாட்டு 50: நிந்தித்தல் – பழித்தல். சினேகம் – நட்பு. கபடம் – வஞ்சகம் குறளி – குறியவள். கோள் – புறங்கூறுதல்.

பாட்டு 51: சீனத்தினர் – சீனதேசத்தவர். வல்லபம் – வல்லமை.

கந்தமல ராலுமொரு வண்டுதேன் சேர்க்கின்ற
கனமுமொரு பூச்சி கூடு
கட்டுவது சீனத்தி னார்க்கும்வரு மோவரிது
காசினியி லொருவ ருக்கு
வந்ததொழி லொருவர்க்கு வாராது அவரவர்கள்
வல்லப மெனச்சொல் லலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 51

## தவறுநிலையிற் பங்கமுறுதல்

வேதங்கள் கற்றமறை யோர்கடங் கருமங்கள்
விட்டிடிற் பின்ன மாகும்
வெற்றிமன் னவர்நல மனீதமாய்த் தானுமிக
வேசெயிற் பின்ன மாகும்
சாதங்கள் தன்னுடைய நலமது குழைந்திடிற்
றானுமது பின்ன மாகும்
தண்ணீரி னலமது கொதித்தயுவ டுற்றிடுந்
தகைமையிற் பின்ன மாகும்
சேதங்கள் செய்யா மருந்தினல மும்பத்
தியங்கெடிற் பின்ன மாகும்
தேமொழி மினார்நலங் கற்புநிலை தவறுபடு
செய்கையிற் பின்ன மாகும்
மாதங்கி யங்காள நாயகி பராசத்தி
வாசலதி கார துரையே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 52

---

பாட்டு 52: கருமம் - செயல் பின்னம் – பழுது. அநீதம் – நீதியின்மை. மினார் – மின்னார் – மகளிர்.

## ஒன்றில்லாததினாற் காரியம்முடியா தெனல்

நெல்லமையு மரிசியுமி வேறாகி னாலரிசி
நிலமதில் முளைத்தி டாது
நிசமாய்க் கலப்பையினி லூற்றாணி பிசகினால்
நின்றுவிடு மேர்ந டாது
இல்லமைந் திடுபூட்டு லிசைதிறவு கோலிலா
தியல்பாய்த் திறந்தி டாது
ஏற்றினற் கெருதுயில் லாவிடிற் றண்ணீ
ரிறைக்கவுந் தான்ப டாது
வில்லமைந் திடுக்கி யின்றியே துப்பாக்கி
வேட்டெழும் பாது பொன்னால்
விளக்காகி னுந்தூண்டு குச்சிதா னில்லாமல்
விட்டிடிற் சோதி யாது
வல்லமை மிகுந்தவர்க ளானாலு முற்றதுணை
வலுவென் றுரைப்ப ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 53

## ஒன்றுக்கொன்றதிக மெனல்

அந்தணர்கள் நூறுபே ரைக்கொன்ற பாவத்தி
லதிகமாம் புண்ணிய செனனம்
ஆன்பசு வொன்றினைக் கொல்வதாம் பசுவைநூ
றைக்கொல்வ ததனி லதிகம்
பந்துமுலை யாரொருவ ரைக்கொலைகள் செய்வதாம்
பாவையர்கள் நூறு பேரைப்
பழிசெய்வ ததனிலுயர் பாவமாம் பெற்றலொரு
பாலகனை யேகொல் வதாம்

---

பாட்டு 53: பிசகு – தவறு. ஊற்றாணி – கலப்பை உறுப்பில் ஒன்று.
பாட்டு 54: சந்ததி – வமிசம்.

சந்ததிகள் நூறுபே ரைக்கொன்ற பாவங்கள்
தன்னிலே யதிக மாகும்
தன்மனது வாக்கினாற் பொய்தனைச் சொல்வது
தான்மகா பாவ மன்றோ
வந்துமணி முத்தாறு பாய்கின்ற பூங்கொன்றை
வளனாடர் பரவு சரணா
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திட நாளும்
வளர்கறுப் பணசா மியே. 54

## பரத்தையரிவரெனல்

கொண்டையினில் மலரிட்டு மையிட்டு நெற்றியிற்
குங்குமப் பொட்டு மிட்டுக்
கொப்பிட்டு வோலையிட் டழகான முத்துமூக்
குத்திமணி நத்து மிட்டு
கண்டசர மிட்டுமோ கனமாலை யிட்டுயிரு
கண்கறுத் திட்ட முலையிற்
கச்சுமிட் டுடையுமிட் டொட்டியாண மிட்டுவளை
கடகமிட் டுச்சி லம்பு
தண்டைபா டகமுஞ் சதங்கையிட் டடியினிற்
தாசியென நாம மிட்டுச்
சதியிட்ட மயிலிட் டணைத்திட் டரைக்காசு
தர்மமது செய்தி டாத
வண்டர்பொரு ளைப்பறித் திட்டெறிய வயன்விட்ட
மதனரச குளிகை யலவோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 55

---

பாட்டு 55: வயன் – அயன் – பிரம்மா.

## பரத்தையர் மையலிற் படலாகாதெனல்

பூங்குழ லசைத்துமுக் குத்திமுத் தாடவேற்
பொருதுமிரு விழிமி ரட்டிப்
புன்முறுவல் கொண்டுமணி முத்துத் தாய்மொழி
புகன்றுசர சங்கள் செய்து
தாங்குமணி வாரிட்ட முலையைக் குலுக்கியிசை
தம்புருவை மடியில் வைத்துச்
சங்கீத வித்தையைச் சாதித்து விரகமிகு
சன்னதந் தனையெ ழுப்பித்
தூங்குமஞ் சத்தினிற் றிண்டொழுகு யயிசுகா
தூளிமெத் தையிலி ருத்திச்
சுகந்த பரிமளமுந் திமிர்ந்துகொக் கோகநூற்
சுரதஞ்செய் தேபணை யமும்
வாங்குமா தரையிளைஞர் சேராம லேமன்ம
தச்சாமி தான்விடு வனோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 56

## காமாக்கினி யொன்றிலடங்காதெனல்

தேனார் மலர்க்கணைகள் தைத்தவிர கிரியாற்
திரண்டவிர காக்கி னிபிடித்
திட்டயிளை ஞோர்கள்தான் பாற்கடலி லாடினுந்
தீராது ஞிமிறு லாவுங்
கானார் பசுங்குழ லச்சைவலங் குழையிட்ட
காதைநிகர் வள்ளை படாக
சனதன மெனுங்குமுழி தானரும் பபசுங்
கதிர்முகச் செங்க மலமும்

---

பாட்டு 56: சாதித்து – பழகி. சன்னதம் – வெறி. ஐசுகாதூளி – ஐXசுகம் X தூளி. ஐ – ஐந்து, சுகம் – இனைக்கம். தூளி – பூந்தாது. பணையம் – பணம்.

பாட்டு 57; தேனார் – தேன்Xஆர். ஞிமிறு – வண்டு.

மீனார் கருங்கணீ லோற்பலம் பவளவாய்
மேவுசெங் குமுத மலர
மிடறொத்த சங்கந் தொனிக்கக் கணைக்கால்
விராலும்விளை யாடு கின்ற
மானார்க ளரையகுள மதில்மூழ்கி னாலாறு
மற்றொன்றி லாறா துகாண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 57

## ஐம்பொறியால் வருங்கேடு

சத்தமா கியபணியிீனோசையதீனால்மான்
றயங்கிவால் வெட்டுண் டிடும்
தான்பரிச மாகிய புலாலினால் மசகமுந்
தாவுகை யால டிபடும்
சுத்தமா கியரூப மாந்திரு விளக்கினாற்
றூயசிறை வண்டி டர்படுஞ்
சொல்லரியா சமதர்ம பூச்சியால் மீனினந்
தூண்டிலிற் பட்டு மாயும்
ஒத்தகந் தத்தா லெறும்புதேன் குடமதி
லூர்ந்துபோ யுண்டு மடியும்
ஒரைந்து விடையத்தி னாலிளைஞர் மிகமன
துழன்றுவெங் காம வெறியால்
மத்தகெச முலையார்கள் தமிலூறு கடிதட
மடுக்குள்வீழ்ந் தழிவ ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 58

---

பாட்டு 58: பணி – பாம்பு. பரிசம் – தொடுதல், மசகம் – கொசு. கந்தம் – நறுமணம். ஐந்து விடையம் – ஐம்பொறிகள்.

## உதவியின் பெருமை

கோடையிற் றண்ணீரும் குடைவிசிறி தொடுதோல்
கொடுப்பவன் புண்ணிய சாலி
குறிப்பறிந் தேயதிதி போசனந் தயவாய்க்
கொடுப்பவன் புருட ரத்தினம்
சோடையாய்ப் போனகுடி வளரவே தாங்கினோன்
துருவனே அருட்சிங் கமாம்
சொல்லரிய வவ்வேளை தன்னிலே யன்னமிடு
சுகிர்தனே புருட மேரு
சாடைகண் டந்தண ரிடுக்கந் தவிர்ப்பவனற்
றயிரிய புசபல கிரீடி
தானேசி ரணமான வாலைய முடிப்பவன்
றரணியிற் சக்கிர வர்த்தி
வாடைகா லத்தினில் மகிழ்ந்தாடை யீய்பவன்
வள்ளலென் றுரைசெய் யலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 59

## கொஞ்சமும் பயன்படாமை

விருந்தாக வந்தவரை விட்டுண்ப வன்தூற்றி
விட்டவா கமபத ரதாம்
விளையாடு சண்டையை வினைச்சண்டை யாய்க்கலக
மீட்டுவோன் றீபூ டதாம்
அருந்தவத் தோரருமை யறியாத முழுமுட
னாடுதின் னாப்பா ளையாம்
ஆருக்கு மாதர விலாதவ னுபகார
மற்றதா ழளங்கா யதாம்

---

பாட்டு 59: அதிதி – பரதேசி; சோடை – வறட்சி. மேரு – மலை. கிரீடி – அரசன். தரணி – பூமி.

பாட்டு 60: எச்சிற்கலை – எச்சில் இலை. சிலை – கல்.

யிருந்திருந்து கொண்ட பெண்டுசொற் கேட்கின்ற
யீனனெச் சிற்கலை யதாம்
ஏற்கைவா சனையோடு சேர்க்கைவா சனைரெண்டு
மில்லா தவனூ மையா
மருந்தினாற் பிணிதீர்த்த பண்டிதர்கள் நன்றியை
மறப்பவன் சிலையென் னலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 60

## நரகத்திலழுந்துவோர்

சிந்தித மனோரத மதாய்த் தானமாகச்
சிலாசா சனத்தி னுடனே
தேவருக்கும் பூசுரர்க் குந்த மிழ்க்குந்
திருந்துசத் திரம தற்கும்
சந்திரா தித்தர்வரை நிரைநிற்க வாதினாட்
டம்மகுட முடியி னிருபர்
தகனஞ்செய் பூமிக்கும் மனதினால் வாக்கினாற்
றானிடர் நினைத்த பேரும்
இந்திரசம் பத்துவு மேற்குடியை வன்கடமை
யேற்றரசு தாங்கி னோரும்
யெழுபிறப் பினுமரவா வாதிநர கத்திலவ
ரெய்தியவ திப்படு வர்காண்
வந்தமரர் படிநீல மேகபுட் கரணிமலர்
வாவிசெறி சோலை புடைசூழ்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 61

---

பாட்டு 61: சிலாசாசனம் – கல்வெட்டு. சிந்திதம் – நினைக்கப்பட்டது. பூசுரர் – அந்தணர். மனோரதம் – மனவேகம். நிரை – ஒழுங்கு. தகனம் – தானம். சம்பத்து – செல்வம்.

## குறையினும் பெருமையுறுவன

தவநியம விரதத்தி னாலுட லிளைத்திடிற்
றானது மிளைப்பு மல்லச்
சமரரண களமதிற் செயமுற்ற கனவீரர்
தன்வடுவும் வடுவு மல்ல
யவனமின் னாரிளைஞர் கலவியிற் றோய்ந்தவ
ரிளைத்திடு மிளைப்பு மல்ல
இல்லையென் றுரையாம லேகொடுத் தேதா
னிளைத்தவ ரிளைப்பு மல்ல
நவமணிகள் சாணயிற் றேய்ந்தது மெலிந்துதா
னிளைந்திடினு மெலிவு மல்ல
நந்திசிவ சன்னதியி னிற்பட்டை யாலே
நடாத்தடியு மடியு மல்ல
மவுனசின் மயமான பரிபூர ணானந்த
வடிவான செகநா யகா
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 62

## சேரிடஞ் சேர்தலிற் புகழடைதல்

திட்டசட் டங்களாய்ச் சேர்த்தெழுது புத்தகஞ்
சிரசிலேற் றிற்பா ரமாந்
தெளிவான புத்தியி லுணர்ந்துநெஞ் சகமதிற்
றேர்ந்திடிற் பார மல்ல
யிட்டபொற் பணியைக் கனத்தியே சுமைசேர்த்
தெடுத்திடிற் பார மாகும்
யிடுமிடந் தனிலிளைஞர் மின்னா ரணிந்துவிடி
லெள்ளவு பார மில்லை.

---

பாட்டு 62: சானை - சாணைக்கல், சின்மயம் - ஞானமயம்,

கட்டமுது தொழின்மேற் கொண்டுவழி செல்லக்
கனத்ததிக பார மாகும்
கடும்பசிக் கியல்பாய் வயிற்றிற் செலுத்திடிற்
கனபார மேது மில்லை
பட்டிளமை தன்னிலே சேரிடஞ் சேர்ந்துவிடில்
மகிமைபிர பலமெய் துவார்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 63

## நடுவு நிலைமை யுள்ளோர்

கதித்தபஞ் சாயத்தி லுபயவா திகள்வழக்
காகவே வந்து நின்று
கரடுமுர டாய்ப்பட்டு நூலைதலை கெட்டிடுங்
காரணம தாக நெஞ்சங்
கொதித்தவர்கள் சொல்வதெல் லாமுமே வாங்கியுட்
கொண்டுபிர மாண மாகக்
கூறுமவர் சாட்சியைக் கேட்டதை யறிந்துபின்
கோதண்ட பாணி யாவை
மதித்தெழு மராமரமு மோரம்பி னாலுருவி
விட்டிடவு மெய்த்த ததுபோல்
விழிநடுவில் மூக்குப் பிறந்ததென ஞாயத்தின்
மேல்மனது நாட்ட முற்று
மதித்துவிவ காரமது தீர்ப்பவரை யுலகத்தில்
மரியாதை ராம னெனலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 64

---

பாட்டு 63: பாரம் - கனம். பொற்பணி - பொன்னாபரணம். கட்டமுது - கட்டுச்சோறு.

பாட்டு 64: உபயவாதிகள் - வாதி, பிரதிவாதி ஆகிய இருவரும். பிரமாணம் - உண்மை, அத்தாட்சி. ஞாயம் - நியாயம் - நீதி.

## பொருளின் பெருமை

கருமந் தொடங்கிலைங் கரன்முன்பு வைக்கவுங்
கல்வியைக் கற்றி டுகவுங்
கட்டழக தாகமென பாடங்கள் செய்யவுங்
கலியாண மதுசெய் யவும்
தருமங்கள் புரியவும் வேளாண்மை செய்யவுந்
தகும்வாணி பங்கள் செயவும்
தலங்கள்தரி சிக்கவுங் காசியிம சேதுவிற்
றான்சென்று நீரா டவும்
திருவிழாச் செய்யவு மாதார மாம்பொன்
செகத்தவர்க் கென்று மவைதான்
திரைகடலி லோடியுந் திரவியந் தேடெனச்
செப்புமொழி நிசமல் லவோ
வருமிரத கெசதுரங் கஞ்சேனை மன்னவர்
மகிழ்ந்துபணி யுபைய சரணா
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 65

## காரியத்திற் கண்ணாயிருத்தல்

இரவியெங் குங்கதி ரெறிக்கினுங் காரத்தி
லேபந்தி பாய்ந்தி ருப்பன்
யெங்குமதி சுடரெறிக் கினுமவன் காரத்தி
லேநாட்ட மாயி ருப்பன்
விரவுமீ காமன்கண் ணெங்கோடி னுங்கப்பல்
மீதுகண் ணாயி ருப்பன்
வீட்டினிற் பணிவிடைகள் செய்யினுந் தாய்பாலர்
மீதுமன தாயி ருக்கும்

---

பாட்டு 65: ஐங்கரன் - விநாயகன். திரவியம் - பொருள். சேது - இராமேசுவரம்.

பாட்டு 66: மீகாமன் - மாலுமி,

அரவகங் கணர்சரா சரமெங்கு நின்றுவிளை
யாடினும் பூரண மதாய்
அறிவுடைய அன்பர்நெஞ் சகமதனி லெப்போது
மகலா திருப்ப ரன்றோ
மரபுநிலை தவறாத நாற்குலங் களுமன்னர்
மனைகளொடு கடைகள் புடைசூழ்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 66

## வரையாது கொடுப்போர் கீர்த்தியில் வடுவில்லை யென்பது

அலர்ந்திடு கடுக்கையங் கண்ணியன் கறைமிடற்
றாகினா னுந்தி பூத்தோ
னவன்விழி யிழந்தன னயன்றலையு மற்றன
னகிலிகை யைத்தே வேந்திரன்
கலந்துகண் ணாயிரம் பெற்றனன் விநாயகன்
காரானை முகம தானான்
கந்தன்மர மாகினான் றேவருக் களவுநிலை
காணாத வடுவு முண்டு
நிலந்தனிற் சக்கிரவர்த் திகள்செம்பொன் மணிமகுட
நிருபர்மாந் தர்கள் தமக்கும்
நிகரிலா வடுவுண்டு நீடுழி நிலைநிற்க
நிசமாக மனது முகமும்
மலர்ந்துசத் தரங்கங் கொடுப்பவர்கள் கீர்த்தியினில்
வடுவில்லை யென்பர் கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 67

---

பாட்டு 67: கடுக்கையன் - கொன்றை. கண்ணியன் - மாலை அணிந்தவன். உந்தி பூத்தோன் - திருமால். அயன் -பிரமன். காரானை - யானை.

## புகழ்தலும் புகழப் படாமையும்

சற்குருவை வாழ்த்திப் பணிந்துமுன் னின்றதிக
தயவுடன் புகழ்தல் வேண்டும்
தருணத்தி லொருநன்றி செய்தவரை மகராசர்
சபையினிற் புகழ்தல் வேண்டும்
சொற்குரிய தோழரைக் கிளைஞர்கூட் டத்திற்
றுதிப்பப் புகழ்தல் வேண்டும்
சோர்விலா தடிமையைக் காரிய முடிந்தபின்
சுகிர்தமாய்ப் புகழ்தல் வேண்டும்
பொற்குடக் கொங்கைமனை யாட்டியுட வருமையைப்
போனபின் புகழ்தல் வேண்டும்
புத்திரனை யொருபோது மகிமையாய்த் தாய்தந்தை
புகழ்தற் படாது கண்டாய்
மற்குவ டெனும்புய மதிற்களப வாசனைகள்
மாலையணி மணிவண் ணனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 68

## தரித்திரத்தினிழிவு

நீரதுவு நுழையா விடந்தன்னி லேநாளு
நெய்யுமது தானு நுழையும்
நெய்யுமது தானுநுழை யாவிடந் தன்னிலே
நேர்மையாய்ப் பாலு நுழையும்
சாரமிகு பாலுநுழை யாவிடந் தன்னிலே
தழலுற்ற புகையு நுழையுந்
தாராள மாகவே புகையுநுழை யாவிடந்
தன்னிலே நெடிய கடல்சூழ்

---

பாட்டு 68: சுகிர்தம் - இன்பம். குவடு - மலை.
பாட்டு 69: தழல் - நெருப்பு. பதுமாசனன் - பிரமன். பதுமம்-பத்மம்-தாமரை

பாரதனி லேதரித் திரர்நுழைவ ராதலால்
        பதுமா சனன்ப டைத்த
    பலவுயிரில் மெலிவான சீவனென வுங்கொடிய
        பாவசென னங்க ளெனலாம்
வாரமது தவறாம லடியார்கள் கிளைவழா
        வரமுதவு கருணா லையா
    மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
        வளர்கறுப் பணசா மியே. 69

## குண விசேடம்

செஞ்சுடர் பகவானு மமுதூட்டு வானரனைச்
        சொந்தத்தை யுந்த கிப்பான்
    சிதமுகில் மழைபொழிந் துலகுகாத் துயிரைத்
        திறத்தடித் தாற்கொல் லுவான்
கஞ்சமலர் மானினிய செல்வவா னாகவுங்
        காண்பளெளி யனாக் குவாள்
    கலைமகளு மறிவுடைய ராய்ச்செய்வ ளறிவிலாக்
        கசடரென வுஞ்செய் குவாள்
தஞ்சமதி லேகொடை படைத்தபே ரிமடதிற்
        றாழ்வுகுண முற்ற போது
    தள்ளியே குற்றங் களைத்தானு மேகுணந்
        தன்னையே கொள்ளல் வேண்டும்
மஞ்சுலவு பூங்கொன்றை நாயகி விளங்குமணி
        வாசலிற் றிகழ்கர்த் தனே
    மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
        வளர்கறுப் பணசா மியே 70

---

பாட்டு 70: சுடர்பகவான் - சூரியன். தகிப்பான் - எரிப்பான். கஞ்சமலர் மான் - திருமகள். கசடர் - சிழ்மக்கள். தஞ்சம் - தாழ்வு. மஞ்சு - மேகம்.

## ஆயுள் விருத்தி

காலைதுயி லாமலே சிவகீர்த்த னங்கள்தான்
கனிவாக வேந டாத்தல்
கருமங்க ளணுவளவு பிசகாம லேதருண
காலங்கள் தனிலி யற்றல்
பாலையும் விடாமலே தினமிரவி லுண்டிடுதல்
பசிகண்டு தான ருந்தல்
பதறாம லேதனக் கிளையமின் னாரையன்
பாகவே கலவி புரிதல்
ஆலய மிகத்தொழுதல் தருமங்கள் செய்குத
லருந்தவர்க் கமுத மூட்டல்
அன்னதா னஞ்செய்த லோமத் தெழுந்தபுகை
யதுதேக மீது லாவல்
மாலையின் வெயிற்காய்த லிவையெலா மாயுளை
வளர்த்திடு மென்பர் நூலோர்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 71

## ஆயுளின் குறைவு

இளவெயிற் சோதியி லிருந்துதய காலத்தி
லேகாய்தல் தலைவ னைத்தான்
இழந்தபெண் வயதுக்கு மூப்பான மாதரை
யிணங்கியும் தாரத் ததினால்
அளவுநிலை தவறியே விடையத் தழுந்துகினு
மழிபிணப் புகைகள் படினும்
ஆகாக் கலங்கல்தண் ணீர்தனை யருந்திடுத
லற்றிராத் தயிர்கூட் டிடல்

---

பாட்டு 71: காலை - விடியற்காலை. அமுதம் - உணவு. ஆயுள் - வயது.
பாட்டு 72: உதய காலம் - சூரிய உதயநேரம். இரா - இரவு.

தளரும்வன் பசிதனை யடக்கினும் பெரியோர்கள்
தம்மையே நிந்திக் கினுந்
தன்மரபு வழிபாடு தப்பினும் புண்ணியந்
தனைமறந் திட்ட பேர்க்கும்
வளராம லாயுட் குறைந்துவிடும் வன்பிணியில்
வாடியவ திப்படு வர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 72

## ஒப்பற்ற ஒருவன்

ஒருவனே தெய்வமென் றுதிபெறு ஞானவா
னொருவனே யொருவ னாகும்
உலகத்தி லேமாந்தர் பலரிலே தானுமே
யொருவனே புண்ணிய வானாம்
பொருதுமரண களமதில் நூற்றிலே யொருவனாம்
புகழுற்ற சுத்த வீரன்
புகலரிய வாயிரம் பெயரிலே யொருவனாம்
புலமையா லிலகு கவிஞன்
தருமவான் இலட்சத்தி லேயொருவன் மகராசர்
சபையினிற் பேச வல்லான்
தாராள மாகக் கொடுப்பவன் கோடியிற்
றானொருவ னென்று ரைப்பார்
வரும்வால கவிராம சாமிசத கத்தமிழின்
மாலைபுனை புயச யிலனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 73

பாட்டு 73: ரணகளம் - இரணகளம், போர்க்களம். வாலகவி - இளமைக் கவிஞர். ராமசாமி - இராமசாமி-நூலாசிரியர்.

## விதி விதியெனல்

விகடமிகு கெருவமுறு மதயானை யுங்கொடிய
விடமுற்ற நல்ல பாம்பும்
வீசிப் பறக்கின்ற பட்சியு மனிதர்கை
மீதகப் பட்டுழல் வதும்
ககனமதி லாயிரங் கிரணம்விட் டெரியிரவி
கலைநிறைந் திடுசந் திரன்
கட்செவி யெனுங்கேது ராகுபகை கொண்டவர்கள்
கண்கலக் கப்படு வதும்
புகலரிய குணமுமறி வுடமையு முடையசற்
புத்திர னெனும்புத் திமான்
பொல்லாத தீயினுங் கொடுமைபுரி யுங்கலிப்
புலிவா யகப்ப டுதலும்
மகமிலகு மலரய னன்னான் விதித்தவிதி
வசமெனத் தான்சொல் லலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 74

## ஒருவரை நோக வகையிலாமை

ஏராத கருமமென் றெண்ணாம லேதா
னிருப்புலக் கையைவி ழுங்கி
யெளிதான சுக்குக்கி யாழங் குடித்துவிடி
லேயது செரிக்கு மோதான்
ஆராய்ந்து பாராம லாகுநா ளவுசாரி
யாடியே மடியு நாளி
லப்போது சங்கரா சங்கரா வென்றிடி
லதிற்பவந் துலையு மோதான்

---

பாட்டு 74: கட்செவி- (கண்xசெவி) பாம்பு. விதிவசம் - ஊழ் வினையின் செயல். மலரயன் - பிரமன். அன்னான் - அவன்.

பாட்டு .5: ஏராத கருமம் - தகாதசெயல். அவுசாரி - அபசாரி - தீய செய்கையுடையவர். பவம் - பாவம். தொந்தம் - பகை.

தீராம லேதொந்த மாகவே வந்துவினை
செயுமொருத் தலைவ லிக்குச்
செம்மையாய்த் தலைகாணி மாற்றினா லந்தவலி
தீருமோ யணுவ ளவுதான்
வாராத வினைகள்தான் வந்திடிற் றானுமொரு
வரைநோக ஞாய முண்டோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 75

## ஊழால் நரக வேதனைப் படுவர்

சிரிலகு லட்சுமீ கரமதுஞ் சற்றிலாச்
சிற்றூ ரிருந்தி டுவனுஞ்
சின்னத் தொழில்களே செய்கின்ற வற்பரைச்
சேவித் திருந்தி டுவனும்
பாரிலகு முயிர்களை வதைத்ததைத் தானிரவு
பகலாய்ப் பொசித்தி டுவனும்
பற்றுவட வாக்கினி யெனக்கோப முடையதொரு
பாரியைச் சேர்ந்தி டுவனும்
பேரிலகு பெண்களை யனேகமாய்த் தானதைப்
பெற்றெடுத் திடுபா வியும்
பிறந்தநாள் முதலாய்த் தரித்திரப் படுகின்ற
பேருடனிவ் வாறு பேரும்
வாரிலகு முலகத்தி லேநரக வாதனையும்
வந்தவதி யும்படு வர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 76

---

பாட்டு 76: பொசித்தல் – புசித்தல் உண்ணுதல். வடவாக்கினி – ஊழித்தீ.

## ஞானி யென்பவர்

தத்துவந் தான்றொணூற் றாறிற் புறக்கருவி
தன்னையறு பதைய கற்றித்
தானுமுட் கருவிமுப்பத் தாறிலே ஆத்மத்
தத்துவமிரு பத்தி னாலும்
வித்தியா தத்துவம தேழையு மேலாய
விளங்குசிவ தத்துவ மைந்தும்
வினாவியுப நிடதத்தை யுங்குருமு னிலையாய்
விசாரணைசெய் தேதெளிந்து
அத்துவித மானதற் கிடரான தெல்லாமு
மறிவினா லேக டிந்து
அசையாமல் நிட்டையி லிருந்துபரி பூரண
மதானபிர மத்தி லறிவை
வைத்துத் தியானமது செய்பவரை யுலகத்தில்
மகாஞானி யென்பர் நூலோர்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 77

## கணக்கினிலை பெற்றவர்

முந்திரி முதற்கோடி மட்டேறு தொகையிடு
முயற்சியுந் தான நிலைகள்
முழுதுமெண் சுவடியத னலகுநிலை சதுரவாய்
முடியிற்கீழ் வாயி லக்கம்
நந்தரம தாகப் பிறந்தகன வினையமு
நற்கணக் கதிகா ரமும்
லாடசங் கிலியெனுஞ் சதுரங்கம் ரெட்டிக்கும்
ஞாபகமு முகபா டமாய்

---

பாட்டு 77: தத்துவம் -96. புறக்கவி - 60. உட்கருவி - 36. ஆத்ம தத்துவம் - 24, வித்யாதத்துவம்7, சிவதத்துவம் 5. இவற்றுள் உட்கருவி முப்பத்தாறையும் (ஆத்மதத்துவம் 24, வித்யா தத்துவம்- 7, சிவதத்துவம் 5) சிறந்த குரு முன் கேட்டுத் தெளிதல் வேண்டும். கடிந்து - நீக்கி.

பாட்டு 78: முந்திரி - 1/320அளவு. பிரளயம் - படையில் ஒரு தொகை. ஒன்பது கூட்டம். அக்குறோணி - அனிகம்-மூன்று கொண்ட படை.

அந்தமிகு பிரளையஞ் சுரிசங்க னீகமே
லக்குறோணி பிரம கற்பம்
அதிநிகர்ப் பஞ்சங்க மாஞ்சமுத் திரமெலா
மளவிட் டெடுத்து ரைக்க
வந்ததிட காணிக்கர் காணிக்க ரிற்சிகா
மணியெனச் சொல்வ ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும் 78
வளர்கறுப் பணசா மியே

## முதல் வள்ளலெனப் பெயர் பெற்றவர்

கண்டவுட னேமுக மலர்ந்துபா லொடுதேன்
கலந்தஞா யங்க ளென்னக்
கனிவுற வணக்கமுற் றருகினி விருந்தலங்
காரவுரை களைவி னாவி
வெண்டயிர்நெய் பாலுடன் விருந்தமைத் திட்டுமண
மேவுசந் தனம ளித்து
மிக்கதாம் பூலங் கொடுத்தினிய கிளையுடன்
மிகக்கவிஞர் பாடி வந்த
தண்டமிழின் மாலையைச் சொல்லெனக் கேட்டபின்
றான்மன மகிழ்ச்சி யாகச்
சமரசம தானகொடை தான்கொடுத் திடுமமிர்த
சரசகுண வறிவா ளனை
மண்டல மதிற்கீர்த்தி பெற்றுத் தழைத்தமுதல்
வள்ளல்நிக ராய்ச்சொல் லலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 79

---

பாட்டு 79: அலங்காரவுரை – மகிழ்ச்சி தரும் பேச்சு. சரசகுணன் - இனிய குணமுடையவன்.

## பயனிலாப் பயன்

படுபாறை மீதுற்ற வக்கினிக் கொன்றிலே
பற்றுதற் காக்க மில்லை
பாரியில் லாதவர்கள் சுகிர்தமிகு தானங்கள்
பண்ணினும் பலனு மில்லை
நடுவான நிலமையை மறந்திட்ட மாந்தர்க்கு
நட்பொருவர் தானு மில்லை
நாடிழந் திடுமகுட நிருபர்க்கு மேன்மைகண்
டாகைபெறு வீர மில்லை
கொடுமைபெறு செல்வம் படைத்தவர்கள் கீர்த்தியைக்
கொள்ளுதற் கேது மில்லை
கொழுநரை யிழந்தமின் னார்களுக் கழகுநய
குணமிருந் தொன்று மில்லை
மடுநீரை விட்டகன் றிட்டதொரு முதலைக்கு
வலுவுமவ் வளவு மில்லை
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 80

## கோபமில்லாதன

திரளபடை நெருக்கமிகு ரணகளத் திடைதான்
சினத்துவீ ரர்கள் வைவதுஞ்
செல்வச் செருக்குறுங் குதலைமொழி வாயினாற்
சிறுகுழந் தைகள் வைவதும்
விரகசுர தம்புரியும் வேளையிற் சரசகுண
மின்னார்கள் தான்வை வதும்
மிகுசனக் கூட்டமிகு சபையினிற் கூத்தாடும்
வேஷதா ரிகள்வை வதும்

---

பாட்டு 80: அக்கினி - நெருப்பு. நிருபர் - அரசர். ஆகை - சம்பவித்தல். ஏது - காரணம். நயகுணம் - நற்குணம். மடுநீர் - பள்ளத்திலுள்ள நீர்.

பாட்டு 81: வைவது - வைதல் - திட்டுவது. சரசகவிராசர் - இனிமையாகப் பேசும் புலவர். பிரசங்கம் - சொற்பொழிவு.

சரசகவி ராசர்பிர சங்கங்கள் செய்கின்ற
தருணத்தி லேவை,வதுந்
தரணிதனி லெவர்கட்கு மனத்துக்கு மின்பமது
தந்திடு மகிழ்ச்சி யன்றோ
வரமுதவு கருணா கடாட்சமிகு கலிகால
மகிமைப்பிர பலமெய் யனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர் கறுப் பணசா மியே. 81

## நற்புதல்வர்கள்

சந்ததி யதாயரிச் சந்திரர்க் கேலோக
தாஷசண னுதித்தல் போலுந்
தசரதர் தனக்குச் செனித்தரெகு ராமரொடு
தானுற்ற துணைவர் போலும்
அந்தமிகும் வசுதேவ ருக்குச் செனித்திட்ட
வழகுகிட் டிணன்போ லவும்
அருமையாய்ப் பாண்டுமக ராசருக் கேபிறந்
தருள்புதல்வ ரைவர் போலும்
கந்தமல ரணியுமிரு கண்டுமுனி வர்க்குமார்க்
கண்டன் பிறந்த தெனவுங்
கதியுற்ற வாயுபக வானுக்கு யனுமான்
கனத்தொடு பிறந்த தெனவும்
மைந்தர்கள் பிறந்துவிடில் மூவேழு தலைமுறையு
மகிமைப்பிர பலமெய் துவார்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 82

---

பாட்டு 82: சந்ததி – வழித்தோன்றல். துணைவர் – தம்பியர், கனத்தொடு – பெருமையாக,

## தீப்புதல்வர்கள்

தீதடர்ந் திடுமிரா வணனுக்கு யிந்திர
செயித்துப் பிறந்த தெனவுந்
திருதராட் டிதனுக்கு யன்னாட் செனித்திட்ட
துரியோ தனன்போ லவுங்
காதலா லுக்கிரசே னனுக்கருமை யாய்வந்து
கஞ்சன் பிறந்த தெனவுங்
கனசூர பன்பனுக் கேபானு கோபன்மா
கடகன் பிறந்த தெனவும்
நாதனை யிகழ்ந்துவிடு மிரணியன் றன்போலும்
நஞ்சான புத்திரர் கள்தான்
நட்டணைய தாகப் பிறந்துவிடி லவர்கள்குலம்
நாசமா யழியு மென்பார்
மாதவம் புரிவோர் மனத்தா லயத்தேற்றி
வைத்திடு மணித்தீ பமே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 83

## உயிர்வருக்கம் வருமாறும் அவற்றின் தொகையும்

பொன்னுலக மீதுற்ற தேவரிற் பேதமது
புகலிலீ ரேழு லட்சம்
பூதலத் தினிலுற்ற மானிடர்கள் பேதம்
பொருந்துமொன் பதுலட் சமாம்
பன்னுநில மீதூர்ந்து திரிகின்ற சீவன்மெய்ப்
பானபதி னொருலட் சமாம்
பகலிரவு மாகாச மீதிற் பறந்திடும்
பட்சியிற் பத்து லட்சம்

---

பாட்டு 83: அடர்ந்திடும் - நிறைந்திடும். கஞ்சன் - கம்சன். நாதன் - தலைவன் (திருமால்) நட்டணை - கொடூரம்.

பாட்டு 84: பொன்னுலகம் - தேவலோகம். பேதம் - வேறுபாடு. ஊர்ந்து திரிவன - ஊர்வனவாகிய உயிர்கள். அமையிலா (தன்மையிலா). புற்பூடு - புல் பூண்டுகள்.

தன்னமையி லாமிருக மதுபத்து லட்சமாந்
தண்ணீரி லுற்ற சீவன்
தான்பத்து லட்சமா மரமுதற் புற்பூடு
தன்னிவிரு பதுலட் சமாம்
மன்னுதொகை யெண்பத்து நாலுலட் சங்களுயிர்
வர்க்கமென் றேசொல் லலாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 84

## மூடரொருவர் கையிலுமடங்காரெனல்

அங்குசந் தனிலடங்கு மியானை வீசுகுற
டாவினி லடங்கு மசுவம்
அந்தணர்கள் மந்திரத் தினிலடங் குந்தெய்வ
மரசரி லடங்கும் வையங்
கங்குலி லடங்குஞ் சராசரஞ் சோதிநிறை
கண்ணினி லடங்கும் ரூபங்
கருடத் தியானத்தி னாலடங் கும்விடங்
கவியினி லடங்கு மவைகள்
பொங்குமாங் காரமது பொறுமையி லடங்குநற்
பொருளினி லடங்கு மாசை
புகலரிய மானமது கற்பினி லடங்குமுயர்
புத்தியி லடங்கு மறிவு
மங்குசிற் றறிவாற் படித்தமுழு மூடரொரு
வகையிலு மடங்கார் கள்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 85

---

பாட்டு 85: அங்குசம் - யானைத்தொரட்டி. (யானையைக் குத்திச் செலுத்தும் ஈட்டி). குறடா - குதிரையைச் செலுத்தும் சவுக்கு. அசுவம்-குதிரை கங்குல் - இருள், இரவு. வையம் - உலகம் (உலக மக்கள்) சராசரம் (சரம்X அசரம்) இயங்கும் பொருள், இயங்காப் பொருள்களடங்கிய உலகம். ரூபம் - வடிவம். விடம் - விஷம். ஆங்காரம் - கருவம். மங்குசிற்றறிவு -ஒளி மழுங்கிய அற்ப அறிவு.

## ஆணவத்தாலழிந்தோர்

சனிமுடவ னாகினான் சூரியன் பல்லெலாந்
தகரவுடை பட்டு விட்டான்
தந்திமுக மாகினா னைங்கரன் சுக்கிரன்
தானுமொரு கண்ணி ழந்தான்
அனியாய மாய்மத னெரிந்தனன் கமலமல
ரயனுமொரு தலையற் றனன்
அழியா வரம்பெற்ற தக்கனாட் டுத்தலைய
தாகினா னக்கினி பகவான்
இனியகை யிரண்டிழந் தானவன் றானுமுன்
னெமதரும னுதைபட் டனன்
யென்னவுந் தேவரிடர் பெற்றதைத் தான்கேட்
டிருந்துமுல குற்ற தெளிய
மனிதருக் காணவமு மவர்ஞாய மாவுனது
மகிமையோ சொல்லய் யனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 86

## விருத்தியடையாதென்பது

ஆணியைக் கல்லினி லுரைத்தெடுத் திடுமெழுகி
லணுவெனச் சேர்த்த பொருளும்
அதிகார முற்றநாள் வலுவினிற் பரிதான
மஞ்சாமல் வாங்கு பொருளும்
வீணிற் கலாபத்தி லூரினிற் கொள்ளையாய்
மிகவிட் டெடுத்த பொருளும்
வினைசெய்து கபடமாய்க் குடிகளைக் கனதெண்ட
மேபிடித் திட்ட பொருளும்

---

பாட்டு 86: ஐங்கரன் - விநாயகன். சுக்கிரன் - வெள்ளி, அசுரகுரு அயன் - பிரமன். ஆணவம் - கருவம்.

பாட்டு 87: பரிதானம் - இலஞ்சம். கலாபம் - கலாபித்தல், கலகம் செய்தல். தெண்டம் - அபராதம். சோரம் - களவு. அடமாய் - தீயமுறையில்.

ஊணின்மன தகவிலை குறைந்துமனி யாயத்தி
லுரிமையாய்ச் சேர்த்த பொருளும்
உற்றசோ ரஞ்செய்து வருகள்வ ருறவுகொண்
டுண்மையாய்த் தேடு பொருளும்
வாணிபஞ் செயுமுறையி லடமாய் வரும்பொருளும்
விர்த்தி ராது கண்டாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 87

## செல்வத்தின் பெருமையும் வறுமையிற் சிறுமையும்

கூடிவரு நாட்கொண்ட மனைவியும் பதினாறு
குறையாமல் மக்கள் பெறுவள்
குபேர சம்பத்து வந்தெய்து மனமதனிற்
குறித்தபடி யெதுவு முடியும்
நாடியா வரும்வருவர் கிளைஞரு மினியகண்
ணாகுமதி தையிரிய மிகவுண்
டாகுமக ராசராற் சிவிகைசாய் மரைகள்கண்
டாகையொடு கீர்த்தி பெறுவர்
ஓடிவெங் கலியன்வந் துற்றநா ளாபத்து
மூடாடி யுலைமெழு குபோ
லுருகுமிடர் வாட்டும் படைத்தபொருள் காற்றினிடை
யோடிபஞ் சாய்ப்ப றக்கும்
வாடிமன மெலியுமிடி வாராது நின்பதம்
வணங்குமடி யார்த மக்கே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 88

---

பாட்டு 88: கூடிவரும் - நல்ல காலம் பிறந்தால். குபேரசம்பத்து - மிகு செல்வம். சிவிகை - பல்லக்கு. சாய்மரை - சாமரை - சாமரம் - கவரி. கலியன் - சனி. ஆபத்தும் ஊடாடி - துன்பமும் வந்து கலந்து. உலைமெழுகு - கொல்லன் உலையில் இட்ட மெழுகு போல. இடர் - துன்பம். மிடி - துன்பம். (நின்பதம் வணங்கும் அடியார் தமக்கு மிடிவராது)

## இடத்தா லிழிவனவுஞ் சிறப்புறுவனவும்

காட்டினிற் கானவர்கள் புனமது திருத்திக்
களைந்தெரி கொளுத்தி மூட்டிக்
கலந்தெழுந் தாகாச மளவாக வெரியினுங்
கனதையங் கதனி லில்லை
வீட்டினிற் தளிகையிற் றயிலமுற் றிடுதிரியின்
மீதினிற் சுடர்ஞெ கிழிதான்
மேவினுந் தீபமென யாவரும் வணக்கமுறு
மேன்மைபெற் றிடுத கமையால்
நாட்டிலொரு குடியில்வெகு மைந்தர்கள் பிறந்திடினு
நளினகுண மறிவு டையவன்
நலமிகு பகீரதனை நிகரான பிள்ளைதனை
ஞாலத் துதித்திடு வர்காண்
வாட்டடங் கண்ணியர்க ளாடுநீ ரொடுமறுகில்
வளைதவனந் தாணி முத்து
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 89

## பயன்படா உபசாரம்

கனபசிக் களையினார்க் கன்னமளி யாமலே
கனகஞ் சொரிந்து மென்னாங்
கரைசெய் திடாமல்முன் வெள்ளம்வந் திடிலணைகள்
கட்டிடிற் காரிய மென்னாம்
புனல்வேணு மென்றவர்க் கதுகொடா தெண்ணையன்
புடனே கொடுத்து மென்னாம்
புருடர்விர காக்கினிக் கரிவையரை மருவாது
பொங்குகடல் மூழ்கி னென்னாம்

---

பாட்டு 89: புனம் - காடு, மலைசார்பூமி. கனதை – பெருமை. தழுகை – (தளிகை – தளி) கோயில். ஞெகிழி – தீ. நளின குணம் – நயமாகப் பேசும் குணம். ஞால – (புகழ்) பரவுமாறு. மறுகு – தெரு. வளை – சங்கு.

பாட்டு 90: களையினார் – (பசியினால்) களைப்போடு உள்ளவர். கனகம் – பொன். சொரிந்து – வாரி வழங்கி. புனல் – தண்ணீர். அது கொடாது – தண்ணீர் தராமல். விரகாக்கினி –விரகத்தீ.

அனல்வீசி யெரிவதனி னீரைவிட் டணையாம
லருமறை முழக்கி லென்னாம்
ஆருக்கு மாபத்தி லுதவாம லேபின்பு
அனேகமாய்ச் செய்து மென்னாம்
மனதுண்மை சொல்லாமல் நம்பினோர்க் குபசார
வார்த்தைக ளுரைத்து மென்னாம்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே, 9੦

## நின்செயலாலே வினையொழியுமென்பது

சந்தான பாக்கியம் பெற்றிடவு நின்றிருச்
சன்னதியை நாடி வரினுஞ்
சற்குருவை நாடினும் புண்ணிய புராணகதை
தான்படித் திடுமி டத்தும்
நந்தாத திருவிழாக் கடையினிற் சென்றிடினு
நவில்கிளைஞர் பாற்செல் லினும்
நவரத்தின மணிமகுட நிருபரைக் கண்டிடவு
நலமாக வேசெல் லினும்
சிந்தாத கிரகநிலை கண்டுமே சோதிடஞ்
செப்புவோர் பண்டிதர் கள்பாற்
செல்லுமுறை யாய்ச்செலும் போதவர்கள் காரியஞ்
சித்தியாய்க் கைமே லதாம்
மந்தார பாரிசா தகமலரின் மாலைபரி
மளமணியு மணிமார் பனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 91

---

பாட்டு 91: நந்தாத - மறையாத. கிரகநிலை - கோள்களின் நிலை. மந்தாரம் - செம்பரத்தை மலர். பாரிசாதகம் - பாரிசாத மலர். பரிமளம் - மிகுந்த மணம்.

## பிறந்துழல்வோர்

இயலான நூறுவய திற்றொணூற் றொன்பதா
மெய்துற்ற தென்று நாலா
யிரத்துநா னூற்றின்மே லெண்ணூறு கொடியவினை
யிடரா யிருக்கு தெனவும்
அயலான முடிவுநாள் மறலிவரு வானென
வறிந்துநின் பொற்ப தத்தை
அன்பாய்ப் பணிந்துபிற விக்கடல் கடக்காம
லாணவம தாந்தத் தினால்
துயிலான திற்கண்ட பொருளான வாழ்வையுந்
துன்னுநீர்க் குமிழி யொத்த
தூலகா யத்தையுஞ் சதமென நினைந்துவெகு
சொந்தமாய் நம்பி மின்னார்
மயலான திற்சுழலு வோரனே கஞ்செனன
மரணமுற் றுழைவ ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 92

## உலகத்தோ டொத்தொழுகல் மேலெனல்

தாலாட்டி னாலழுங் குழவிமன திளகியே
தனைமறந் தேயு றங்குஞ்
சத்தமிடு துடியினாற் பேயுமன திளகியே
தலைசுற்றி நடன மாடுஞ்
சீராடு மாயரால் மனதிளகி யேயெறிந்
திடுபசுவு மமுத முதவுஞ்
சிட்டியிசை யாலுமன திளகியே படம்விரித்
தேநல்ல பாம்பு மாடும்

---

பாட்டு 92: மறலி – எமன். ஆணவம் - செருக்கு. மதாந்தம் – மதம்x அந்தம். துயிலானதிற் கண்ட பொருள் - கனவில் கண்ட செல்வம் தூலகாயம் – பருஉடல் சதம் – நிலையானது.

பாட்டு 93: துடி – உடுக்கை. ஆயர் – மேய்ப்போர். எறிந்திடுபசு - உதைத்திடும் பசு. அமுதம் – பால். உலுத்தர் - உலோபிகள்.

பாராட்டு மின்சொலால் மனதிளகி மிகவுமன்
பாய்ப்பொருள் கொடுப்பர் நல்லோர்
பாரத முரைத்திடினு மனதுசற் றிளகார்
பணம்படைத் திடுமுலுத் தர்தான்
வாராட்டு முலையா ரெறிந்தாடு மம்மானை
வானுலவு மாட மேவும்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 93

## உலகத்தோ டொத்தொழுகல் மேலெனல்

நான்மறை விளங்காறு சாஸ்திரம் பதினெண்
புராணநன் னெறிக ளெல்லாம்
நவிலாக மங்களிரு பத்தெட்டு மறுபத்து
நாலா கலைக்கி யானமுந்
தானுணர்ந்தே சாலர சகுளிகை யிட்டந்
தரத்தினிற் றடையி லாமற்
தாவுகே சரிமார்க்க மாகப் பறந்திடுந்
தவகெவுன சித்த ரெனினுந்
தேன்மலி கடற்சுற்று புவியோர் நடத்தையைத்
தீதென் றுரைக்கி லவரைத்
தெரியா மறுக்கொண்ட பித்தரென நிந்தனைகள்
செய்திடுவ ராத லாலே
மீனமுடை யோருலகு தழுவியென் னாளுமொரு
வழியாய் நடப்ப ரன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 94

---

பாட்டு 94: நான்மறை – நான்கு வேதம். ஆகமங்கள் – தரும நூல்கள். கலைக்கியானம் – கலை அறிவு. சாலரசகுளிகை – சாலவித்தை புரியும் மந்திரம். அந்தரம் – வானவெளி. கேசரி மார்க்கம் – ஆகாய மார்க்கம். மறு – குற்றம்.

## காலம் பார்த்து வெல்லல்

காலமது கருதாமல் நிலமையுடை யோர்களைக்
கபடமாய்த் தான்செ யித்தே
கட்டியவர் தேசத்தை யாளத் தகாதுமுற்
காதைசிந் தாமணி யினில்
சாலமிகு கட்டியக் காரன்வஞ் சகமதாய்ச்
சற்சந்த மகரா சனைச்
சதிசெய்து வரசாளு நாளினிரு பன்மனைவி
தனையனைப் பெற்று மகலப்
பாலகனும் வணிகர்மனை மீதினில் வளர்ந்துநற்
பருவம்வந் தவன மைச்சன்
பான்மையை வினாவவுங் கட்டியக் காரனைப்
படையெடுத் தவனை வென்றே
வாலசீவ கனரசு பெற்றதென யவர்பூமி
வலியவந் திடுமென் பர்காண்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 95

## ஒருவரொருவர் நினைவின்படி முடியாதெனல்

கள்ளவஞ் சகமானின் மேலாசை கொண்டவள்
கடுஞ்சிறையின் மீதி ருந்தாள்
கபடமா னாய்வந்த மாரீசன் ராகவன்
கணையினா லேம டிந்தான்
துள்ளழகு மானைப் பிடித்திடச் சென்றமால்
துணைவிசி தையையி ழந்தான்
சூதினால் மிதுலைவளர் வல்லியை யெடுத்தவன்
சுற்றமொடு பெற்ற மக்கள்

---

பாட்டு 95: முற்காதை - பழங்கதையாகிய சீவகசிந்தாமணி. கட்டியக் காரன் - கட்டியங்காரன், சச்சந்தனின் அமைச்சன். வால சீவகன் - இளைஞனாகிய சீவகன்.

பாட்டு 9 : வஞ்சகமான் - மாரீசனாகிய மாயமான். வெள்ளம் - ஓர்எண்.

வெள்ளமிகு சேனையுந் தோற்றிலங் காபுரியும்
விட்டிரா வணனி றந்தான்
வீணாக அவரவர் நினைத்தபடி முடியாமல்
வேறான காரண மெலாம்
வள்ளலா கியசிவன் செயலல்லால் வேறென
மதித்திடக் கடவ தன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 96

## ஒருவர்க்கொருவர் புத்தி சொன்னாற் தன்னைச் சேராமற் சொல்ல வேண்டுமெனல்

ஆதிநாட் காவிரி வலஞ்சுழியின் மீதுகீ
ழாறுகொண் டிடவு மபையன்
அடைத்துமுடி யாமலன் னகரிலே ரண்டமுனி
யண்டையிற் சென்றி றைஞ்சிச்
சேதிசொல் லவருன் முடித்தலை கொடுத்தாற்
றிரும்புநதி யென்று ரைக்கச்
சேம்பிமன திச்சுழியில் விழுந்திடக் காவிரி
திரும்பரிசி நாமு ரைத்த
போதனையி னாலரசு வீழ்ந்திறந் தான்பழி
பொறுத்ததே நம்மை யென்று
பொய்முனியு நதிமடுவி லரசோ டிறந்த தாற்
புத்தியொரு வர்க்கு ரைத்தால்
மாதுரிய மாய்த்தனைச் சேராம லேயுசித
மாய்ச்சொல்ல வேண்டு மன்றோ
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 97

---

97: வலஞ்சுழி - ஓர் ஊர். கீழாறு - கீழ் ஊற்று. அபையன் - சோழன். பொறுத்தது - சார்ந்தது. ஆசோடு - குற்றத்தோடு. மாதுரியமாய் - விவேகத் தோடு.

## தமிழ் நாட்டெல்லை

கனகவட வரையதற் கேதெற்க தாம்பரத
கண்டமேற் சம்பு தீவிற்
கருதுமம் பத்தாறு தேசத்தில் வேங்கடங்
கன்னியா குமரி தெற்காம்
அனைவரும் பரவுமலை யாளமேற் காங்கிழக்
காங்கடற் றிசைக ளெல்லை
ஆனகர் நாடக மதிற்றிரா விடமிகுந்
தனகொழுகு பாண்டி நாட்டில்
தனபதி கிரீடபதி சிவகங்கை யாதிபதி
சத்திரபதி சபையி லுற்ற
சங்கத் தமிழ்க் கவிஞரிற் சேதுபதி யெனுஞ்
சக்கிரபதி பாடல் பெற்றோன்
வனசநிதி மல்லைவரு கவிராச னமிர்தகவி
மாலையணி புயச யிலனே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 98

## மானதபூசை யதிகமெனல்

பூத்தமல ரிட்டுனது வுபய சரணந்தனைப்
போற்றுவது வேபூ சையாம்
பூசையினி லதிகமாம் புண்ணிய நூலாலே
புகழ்ந்துதோத் திரஞ்செய் வதாற்
தோத்திரஞ் செய்வதினி லதிகமா மந்திரந்
தொடுத்துச் செபஞ்செய் வதாந்
தூயமந் திரசெபம் புரிவதினி லதிகமாந்
துதிமனத் தியான மாகும்

---

பாட்டு 98: தனகொழுகு – செல்வ வளம்மிக்க. சேதுபதி – இரகுநாத சேதுபதி. மல்லை – மிதிலைப்பட்டி.

பாட்டு 99: உபயசரணம் – இரண்டு பாதங்கள். செபம் – மந்திரம்ஓதுதல். தியானம் – உள்ளத்தால் நினைத்தல். மானதம் – உள்ளத்தில் இருப்பதாகவே பாவித்தல்.

ஏற்றமுற் றிடுமனத் தியானத்தி லதிகமா
மினியமா னதம தாகும்
யிந்தநெறி தெரியாத வுனதடிமை யான்செனன
மீடேற வீடு பெறவும்
மாத்திரைப் போதுனையு மறவா திருக்கவென்
மனத்தினிற் குடிகொள் ளுவாய்
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே. 99

## தமிழறிந்தவனீயெனல்

சதுமறை யவன்றலைவி யருளா விலக்கியந்
தனையிலக் கணமு ழுவதுந்
தான்கற்று ணர்ந்துதெளி வாய்ப்பாஞ்ச சன்னியந்
தருமாணி முத்தென் னவும்
முதுமங்க லச்சொனிறை மொழிகவுட பாதமடி
மோனைசீர் தளைக டைதலை
முரணிசைவ தாய்ப்பொருட் கொண்டுநிரை யாயடி
முடங்காம லேதுள் ளலாய்
புதுமைதரு மோசையு மலங்கார மெல்லாம்
பொருந்தநாற் கவிசி றப்பாய்ப்
பொங்முலை வாய்மெழுகு போல்மன துருகியே
புலவோர்கள் தானு ரைக்கும்
மதுரந் ததும்புதமிழ் மாலைபுனை யுங்கருணை
வள்ளல்சந் தான தருவே
மணிகொழித் திடும்வேலை நகர்செழித் திடநாளும்
வளர்கறுப் பணசா மியே 100

---

பாட்டு 100: சதுமறை - சதுர்மறை. மறையவன் - பிரமன். கடவுபாதம்- கௌட நெறியினமைந்த பாடலடி. முரண்-முரண்தொடை. துள்ளல்-கலிப்பாவின் ஓசை. நாற்கவி - நால்வகைப்பா-வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி.

## இந்நூற் செய்தவர் பேரும் காலமும் நூற்பயனும் வாழியும்

தருவுறங் காப்புளியி னீழல்விளை யாடுவோன்
தற்பரா னந்த ரூபன்
சாம்பிராணி வாசகன் கருணைமழை யுலகெலாந்
தான்பொழி நீல மேகம்
வருபஞ்ச கலியாணி நடனவாம் பரியினான்
மண்டலிகர் பரவு சரணன்
மணிகொண்ட வேலா புரிக்கறுப் பண்ணர்மேல்
வாலகவி ராம சாமி
துருவமிகு கலியுக நாலா யிரத்திற்றொ
ளாயிரநாற் பத்து முன்றிற்
சுபகிருது வருடமேற் சிவனிராத் திரியினிற்
சூட்டுசத கத்தமிழ் தனை
அருமையாய்க் கற்றுணர்ந் ததிலுற்ற பொருளெலா
மாராய்ந் தறிந்த பேர்கள்
அளகைக் குபேரனென வாழ்ந்துமார்க் கண்டரென
அழியா வரம்பெறு வரே. 101

சதகம் முற்றும்




பாட்டு 101: தற்பரன்-மேலானவன் - இறைவன். ஆனந்தரூபன் - பேரின்ப வடிவானவன். மண்டலிகர்-அரசர். கலி-4943 - கி.பி. 1791. அளகை- குபேரன் நகரம்.

## எமது வெளியீடுகள்

**மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ்** ரூ 6-00

கவிஞர் சி. அன்பானந்தம்

**அபிராமி அந்தாதி** ரூ 6-00

விளக்கவுரையுடன்
பேராசிரியர் ந இராமநாதன் எம் ஏ., பி. ஓ எல்

**மதுராபுரி அம்பிகை மாலை** ரூ 1-00

**கம்பன் இலக்கிய உத்திகள்** ரூ 32-00

டாக்டர் ச. வே சுப்பிரமணியன்



**மெய்யம்மை பதிப்பகம்**

காரைக்குடி—1 சென்னை—14